வெளியீடு எண் 22.

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி

(பொழிப்புரையுடன்)





திருவிடைமருதூர்
ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்
1964

வெளியீடு எண் 22.

உ

சிவமயம்

பட்டினத்துப்பிள்ளையார் அருளிய

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி

(பொழிப்புரையுடன்)

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

ஏழாவது ஆண்டு

திருமுறைப் பாராயணவிழாத் தொடக்கநாள் வெளியீடு.





திருவிடைமருதூர்

ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்

10—9—1964

79-3

உ
சிவமயம்

# முகவுரை

திருவேகம்பமுடையார் திருவந்தாதி என்னும் இந்நூல் பதினொராம் திருமுறையுள் உள்ள நாற்பது பிரபந்தங்களில் ஒன்று. இந்த நூலை ஆக்கியோர் பட்டினத்துப்பிள்ளையார். இவர் சோழநாட்டில் மிகப் பழமையான நகரமாகிய காவிரிப்பூம்பட்டினத்திலே வைசியகுலத்திலே தோன்றியவர்.

தமிழிலுள்ள பிரபந்தங்கள் தொண்ணூற்றுறுள் அந்தாதியும் ஒன்று. ஒரு செய்யுளின் எழுத்தோ, அசையோ, சீரோ, சொல்லோ, அடியோ அடுத்த செய்யுளின் தொடக்கமாக வருவது அந்தாதிநூலின் இலக்கணமாகும்.

திருவேகம்பமுடையார் திருவந்தாதி கட்டளைக் கலித்துறையால் ஆக்கப்பட்டுள்ளது. நூறு பாடல்களை உடையது. ஆசிரியர் காஞ்சிபுரத்தின் இயற்கை அழகினையும், இறைவன் அங்கு இருந்து ஆன்மாக்களுக்குச்செய்யும் அருளினையும் ஆங்காங்குச் சிறந்த முறையில் விளக்கியுள்ளார். பட்டினத்தார் மெய்யடியார் என்பது அனைவரும் அறிந்த ஒன்று. அதற்கு ஏற்ப நூலின் தொடக்கத்திலேயே தொண்டர்கள் சிறப்பையும், தொண்டினுடைய சிறப்பையும், தான் தொண்டுசெய்யும் நிலையறியேன் என்பதையும் மிகச் சிறப்பாகக் கூறியுள்ளார். இவர்களுடைய நோக்கம்

தொண்டர்கட்குப் பணி செய்தல், சிவாலயத் திருப் பணி செய்தல் ஆகியவையே என்பது உணரக் கிடக் கின்றது.

பட்டினத்துப்பிள்ளையார் பற்பல தலங்களுக்கும் சென்று வழிபட்டு இறையருளைப் பெற்றவர். இந்த நூலுள் ஐம்பத்தைந்தாம் பாடல் தொடங்கி, அறு பத்தைந்தாவது பாடல்வரை, சிறந்த தமிழ்நாட்டுத் தலங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவ்வத்தலங்களில் தான் ஈடுபட்ட சிறப்பினையும், அவ்வத்தலங்களின் சிறப்பினையும் தெளிவாக விளக்கியுள்ளார்.

இதனுள் அகப்பொருட்சுவையுள்ள செய்யுட்கள் மிகுந்து காணப்படுகின்றன. அல்லாமல் வேதங்கள், இறைவன் வேதங்களுக்குப் பொருள் அருளியமை, திரிபுரம் எரித்தமை, ஆனஞ்சு ஆடும் சிறப்பு ஆகிய இறைவனது தன்மைகள் யாவும் படித்து இன்புறற்கு உரியன. தேவாரம், திருக்கோவையார், திருவாசகம் முதலாய நூல்களின் கருத்துக்கள் ஆங்காங்கு ஏற்ற முறையில் எடுத்து ஆளப்பட்டுள்ளன.

இறைவன் பலியேற்ற சிறப்பினையும், அப்போது இறைவனது அழகில் ஈடுபட்ட பெண்கள் அவரிடம் மையல்கொண்டு தம் கைவளை முதலாயின நெகிழ நின்றார்கள்; இந்நிலையறிந்த அவர்களது அன்னையர் மிகவும் துன்புற்றனர் என்று கூறியுள்ள சிறப்பு உன்னி உணர்தற்குரியது. இதுபோன்ற பல அகப் பொருட்சுவை மிக்க பாடல்கள் இந்நூலுள் உள்ளன.

சங்ககால இலக்கியங்களுள் காணப்படும் 'ஏறு தழுவுதல்' என்னும் துறையை இந்நூலுள் உள்ள

79-3



91-ம் பாடலால் அறியலாகும். "படையார் கருங் கண்ணி" என்ற திருக்கோவையாரிலும் இத்துறை காணப்படுகிறது.

பட்டினத்துப்பிள்ளையார் தம்முடைய தொண்டின் உண்மைநிலையை இறுதிச் செய்யுளால் நன்கு எடுத்து விளக்கியுள்ளார். இறைவனைப்பற்றிக் கூறியிருப்ப தால் எனது உரை பிதற்றுரையாயினும் மெய்த் தொண்டர்கள் வேதப்பொருளாகக்கொண்டு மகிழ்வர் என்று கூறியுள்ளார். இதுகொண்டு இவரது இறை அன்பையும் தொண்டின்மேன்மையையும் உணரலாம். திருவேகம்பர் தம்பால் அன்புகொள்ளுமாறு என்னை ஆக்கித் தன்னைப்பற்றி நூறு பாடல்களும் பாடுமாறு செய்தார் என்னும் உண்மையை 'பதிற்றுப்பத்துப் பாட்டி வைத்தார்' என்னும் தொடர்கொண்டு உண ரலாம். ஆகத் தான் இறையருள்பெற்றே இதனைப் பாடியுள்ளேன் என்று அவரே குறிப்பிட்டிருப்பது நம்மனோர் குறிக்கொண்டு உணரவேண்டிய ஒன்று.

ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுக் காஞ்சிபுரத்தில் இறைவி முப்பத்திரண்டு அறங்கள்செய்த சிறப்பினை 82-ம் பாடலால் விளக்கியுள்ளார். காஞ்சிபுரநகரின் வளப்பங்களை நகர்வளங்கூறல் என்னும் துறையில் வைத்துக் கூறியுள்ளார். 78-ம் பாடல் இத்துறையில் அமைந்ததாகும். அகத்துறைபற்றிய செய்யுட்கள் யாவும் இடங்கட்கு ஏற்ப அமைந்து காணக்கிடக்கின் றன. அவைகள் யாவும் சுவைமிகுந்தனவாய் உள்ளன.

இத்தகைய சுவைமிக்க அரிய நூலினை யாவரும் எளிமையில் படித்துப் பயன்பெறவேண்டும் என்ற முறையில் காலத்திற்கேற்ப எளியமுறையில் இந்த

நூலுக்கும் பொழிப்புரை எழுதி வெளியிடவேண்டும் என்று திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதினத்து இருபத்தொராவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ - ல - ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள் ஆணையிட்டுப் பணித்தார்கள். அவர்கள் அருளாணையை அடியேன் சிரமேற்கொண்டு, என் சிற்றறிவிற்கு எட்டியவரை மரபு சிறிதும் பிறழாமல் இந்நூலுக்கு எளிய இனியமுறையில் பொழிப்புரை ஆக்கியுள்ளேன்.

இவ்வுரையோடு கூடிய நூல், திருவாவடுதுறை ஆதினத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில் முறையாக நடைபெற்றுவரும் ஏழாவது ஆண்டு திருமுறைப் பாராயணத் தொடக்கவிழா வெளியீடாக வெளிவருகின்றது. பிழையுளதேல் அறிஞருலகம் பொறுத்தருள்க.

இங்ஙனம்,

திருவிடைமருதூர்
8—9—1964

பொன். சுப்பிரமணியபிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்,
திருவாவடுதுறை ஆதீன உயர்நிலைப்பள்ளி.

## பட்டினத்தார் துதி

விளம்புகா ரெனுமிடற்று மருதிறைவன்
திருவருளின் மெய்ம்மை நோக்கிக்
களம்புகார் வில்மதன் றன் படைமகளிர்
புவிஆசை கருதுங் காதல்
உளம்புகா ராகிவெறுத் தணைந்தொருமும்
மணிக்கோவை உகந்து நல்கும்
வளம்புகார்ப் பட்டினத்துப் பிள்ளைஎனும்
பெரியவர்தாள் மனத்துள் வைப்பாம்.

— மருதவனப்புராணம்.

மணிக்கோவை அணியுமைசேர் இடைமருத
வாணர்தம்மேல் மலைத்தேனைநன்
மணிக்கோவை உனுஞ்சுரபி யின்பாலோ
ஈதெனமா மதுரச் சொல்லும்
மணிக்கோவை எனும்வளங்கொள் பிரபந்தம்
சாற்றிஅருள் வாய்ந்த ஞான
மணிக்கோவை இசைசெய்புகார்ப் பட்டினத்தெம்
அடிகளையாம் வழுத்தல் செய்வாம்.

— திருவிடைமருதூர்க் கலம்பகம்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

## பட்டினத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# திருவேகம்பமுடையார் திருவந்தாதி

---

திருச்சிற்றம்பலம்

1 மெய்த்தொண்டர் செல்லும் நெறிஅறி
யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலும் நற்றொண்
டுவந்திலன் உண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற
மேஉன்னைப் போற்றுகின்ற
இத்தொண்ட னேன்பணி கொள்ளுதி
யோகச்சி ஏகம்பனே.

பொழிப்புரை: அழகிய காஞ்சிபுரத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கும் ஏகம்பனே! அடியவனாகிய நான் உனது மெய்யடியார் செல்லுகின்ற நல்ல வழியை அறியும் ஆற்றல் உடையேன் அல்லேன். யாவரும் விரும்பிச் செய்யும் உனது திருப்பணியைச் செய்யும் அடியார்களிடத்து நல்ல அன்பு செலுத்தும் பண்பும் என்னிடம் காணப்படவில்லை. என்றும் அழிகின்ற நிலையினையுடைய இந்த உடம்பைக் காப்பதற்காகச் சோற்றை உண்டு, அதற்காகப் பல பொய்யான

தொண்டினை மேற்கொண்டுள்ளேன். இத்தகைய இழி நிலையிலுள்ள எளியேனது தொண்டினையும் ஏற்றுக் கொள்ளுவாயோ? கொள்ளவேண்டும் என்று கூறு கின்றார்.

மெய்த்தொண்டர் - மனம், மொழி, மெய்களால் இறைவனை எக்காலமும் வழிபாடு செய்யும் தொண்டர். நல் பணி - சிவபெருமானுக்குச் செய்யும் பணியாகிய சிவாலயத் திருப்பணி. பொய்த்தொண்டு - மனம் மொழி மெய்கள் ஒருவழிப்படாது செய்யும் தொண்டு.

காஞ்சிபுரத்தில் எழுந்தருளியுள்ள ஏகம்பனே! அடியேன் உண்மை அடியார் செல்லும் வழியையும் அறிந்திலேன், உன் சிவாலயத் திருப்பணி செய்யும் அடியார்கட்கும் தொண்டு செய்திலேன், இத்தகைய பொய்த்தொண்டனேனாகிய அடியேனது பணியையும் நீ ஏற்றுக்கொள்ளுவாயோ என்பது கருத்து.

நெறி - வழி. கைத்தொண்டர் - ஒடுங்கித் தொண்டு செய்யும் அடியார். புறம் புறம்: அடுக்குத்தொடர்.

2 ஏகம்ப னேஎன்னை ஆள்பவ
னேஇமை யோர்க்கிரங்கிப்
போகம்பன் னூங் கொடுக்கின்ற
நாயக பொங்கும்ஐவாய்
நாகம்பொன் னூரம் எனப்பொலி
வுற்றுநன் னிறணியும்
ஆகம்பொன் மாமலை ஒப்பவ
னேஎன்பன் ஆதரித்தே.

பொ - ரை: ஏகம்பத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனே! உன்னை விரும்பிப் பணியும் அடியவனாகிய என்னை நீ ஆண்டு அருள்செய்ய வேண்டும்.

நீயோ தேவர்கள்பொருட்டு மனமிரங்கி எந்த நாளும் அவர்களுக்கு வேண்டிய செல்வங்களைக் கொடுத்து அருள்கின்ருய். இறைவனே! உன்னுடைய மார்பில் சீறுகின்ற ஐந்தலை நாகம் பொன்னுலாகிய மாலை போல விளங்கிக்கொண்டிருக்கின்றது. திருமேனியோ அடியார்கட்கு நன்மை அளிக்கும் திருவெண்ணீற்றுப் பொலிவுடன் விளங்குகின்றது. உனது திருவுருவமோ பொன் மலையை ஒத்து விளங்குகின்றது. இத்தகைய சிறப்புடைய உனது வண்ணங்களை என் மனத்துள் என்றும் எண்ணித் துதிப்பேன்.

ஏகம்பத்தில் உள்ள இறைவனே! உனது பாம்பு அணிந்த மார்பையும், திருநீறணிந்த திருமேனியை யும், பொன் மலையை ஒத்த உருவத்தையும் என்றும் எண்ணித் துதிப்பேன் என்கின்ருர்.

ஐ வாய் - அழகு வாய்ந்த எனினுமாம். போகம் - செல்வம். ஆரம் - மாலை. நல் நீறு - நன்மை அளிக் கும் திருநீறு. “பவளம்போல் மேனியிற் பால்வெண் ணீறும்” என்னும் தேவார அடி ஈண்டு ஒப்புநோக்கற் குரியது.

இச்செய்யுளில் காணப்படும் ஏகம்பனே! ஆள்ப வனே! ஒப்பவனே! என்ற விளிகள் யாவும் அன்பு மிகுதியினுல் எழுந்தவை என்றுகொள்ளவேண்டும்.

ஆதரித்து - விரும்பி. நாயக - தலைவனே.

3 தரித்தேன் மனத்துன் திகழ்தரு
நாமம் தடம்பொழில்வாய்
வரித்தேன் முரல்கச்சி ஏகம்ப
னேஎன்றன் வல்வினையை

அரித்தேன் உனைப்பணி யாதவர்
ஏழைமை கண்டவரைச்
சிரித்தேன் உனக்கடி யார்அடி
பூணத் தெளிந்தனனே.

பொ - ரை : பெரிய பூஞ்சோலைகளில் வண்டுகள் தேனுகிய மதுவை உண்டு இசைபாடும் காஞ்சிபுரத்தில் உள்ள திரு ஏகம்பனே ! உனது விளக்கமாகிய திருப் பெயரை என்றும் என் மனத்துட்கொண்டுள்ளேன். அவ்வாறு கொண்டுள்ள காரணத்தால் எனது வலிய வினைகள் யாவும் என்னைவிட்டு நீங்கிவிட்டன. மேலும், யான் உன்னை விரும்பி வணங்காதவர்களது அறியாமையைக் கண்டு எள்ளி நகையாடினேன். உன்னுடைய உண்மை அடியவர்களது திருவடிகளை எனது தலையின்மேல் அணிந்துகொண்டு, அதனுல் நான் அறிவு தெளிந்தேன் என்கின்ருர்.

கடவுளது திருப்பெயரை நாவினுல் கூறுவதைக் காட்டிலும் மனத்தில் இருத்திவைப்பது பெரும் பயன் விளைக்கும் என்னும் உண்மையை, ‘தரித்தேன் மனத்துன் திகழ்தரு நாமம்’ என்ற பகுதியால் விளக்குகிருர். ‘வல்வினையை அரித்தேன்’ என்பதால் அவர் திருப்பெயரை நாவினுல் கூறுவதால் அடையும் நன்மையை அதாவது நம்மைப் பற்றிய வினை கெடும் என்பதைச் சுட்டிக் காட்டுகிருர். வினையினை வென்ற மெய்யடியார்கள் இறைவனைப் பணியாதவரைக் கண்டால் அவர்களது அறியாமையை எண்ணி எள்ளி நகையாடுவர் என்னும் கருத்தை ‘உன்னைப் பணியாதவர் ஏழைமைகண்டு அவரைச்சிரித்தேன்’ என்ற அடியால் உணர்த்துகின்ருர். இறைவனிடத்து உண்மையன்பு உடையவர்களுக்கு அடியாரடி பணிவதைக்காட்டிலும்

சிறப்புடையது எதுவுமில்லை ஆதலால் 'உனக்கு அடியாரடி பூணத் தெளிந்தனன்' என்றும் கூறியுள்ளார். ஆக ஆன்மாக்களாகிய நாம் இறைவன் திருப்பெயரை நாவால் கூறுவதால் தீவினைகளற்று இறைவனது அடியாரடி பூணும் தெளிவினை அடைந்து இன்புடன் வாழ்வோம் என்கின்றார்.

திகழ் - விளங்கும். தடம் - பெரிய. வரி தேன் - இசைபாடும் வண்டு. முரல் - ஒலித்தல். அரித்தேன் - அழித்தேன். ஏழைமை - அறியாமை.

4 தெளிதரு கின்றது சென்றென்
  மனம்நின் திருவடிவம்
அளிதரு நின்னருட் கையம்
  இனியில்லை அந்திச் செக்கர்
ஒளிதரு மேனிஎம் ஏகம்ப
  னேஎன் றுகந்தவர்தாள்
தளிதரு தூளிஎன் றன்தலை
  மேல்வைத்த தன்மைபெற்றே.

பொ - ரை : மாலைக்காலத்துத் தோன்றுகின்ற செவ்வானம்போல ஒளியைத் தருகின்ற திருமேனியை யுடைய ஏகம்பத்து இறைவனே என்று புகழ்ந்து கூறும் அடியவர்கள் திருவடிகளில் படிந்த தூளியை என் தலைமேல் தரித்துக்கொண்டுள்ளேன். இவ்வாறு தரித்துக்கொண்டுள்ள சிறப்பால் என் மனமானது என்றும் உனது திருவுருவத்தையே காண விரும்புகின்றது. அவ்வாறு விரும்புவதால் கருணையையே என்றும் அளிக்கும் இயல்பினையுடைய உனது அருள் எனக்கு எப்பொழுதும் உறுதியாகக் கிடைக்கும். இதில் எனக்கு எந்நாளும் ஐயம் இல்லை.

அடியார்களது திருவடித்துளியை என் தலைமேற் கொண்ட காரணத்தால் நான் உனது திருவுருவத்தைத் தெரிந்து தெளிந்து வழிபட்டேன்; அவ்வாறு வழிபட்டமையால் உன் திருவருள் எனக்குக் கிடைக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. திருவருள் பெறுவதே ஆன்மாவின் குறிக்கோள் என்பதாம்.

செக்கர் - செவ்வானம். உகந்தவர் - விரும்பிய அடியார். தளிதரு - படிந்த. அளிதரும் - கிருபை செய்யும்.

5 பெற்றுகந் தேன்என்றும் அர்ச்சனை
செய்யப் பெருகுநின்சீர்
கற்றுகந் தேன்என் கருத்தினி
தாக்கச்சி ஏகம்பத்தின்
பற்றுகந் தேறும் உகந்தவ
னேபட நாகக்கச்சின்
சுற்றுகந் தேர்விடை மேல்வரு
வாய்நின் துணையடியே.

பொ - ரை: திருக்கச்சி ஏகம்பத்தில் விருப்பம் வைத்து உறையும் சிவபெருமான் தனது கையில் ஆன்மானைத் தாங்கியிருக்கின்றார். படத்தையுடைய நாகத்தைக் கச்சாக இடையில் சுற்றிக் கட்டியுள்ளார். இடபத்தை வாகனமாக ஏற்றுக்கொண்டுள்ளார். இத்தகைய இறைவனது இணையடிகளை என்றும் அன்பினால் துதித்து அருச்சித்தலை விரும்பவேண்டும். அவ்வாறு நான் அருச்சனை செய்ததால் இறைவனை அடைந்து உயர்வடைந்தேன். என் மனம் இனிதாக இருந்ததால் நான் உன் சிறப்பினைக் கற்று உயர்வினை அடைந்தேன்.

கச்சியேகம்பனே! நான் உனது திருவடியை அடைந்து அருச்சனை செய்து வழிபட்டேன். உனது புகழை என் மனக்கருத்திற்குப் பொருந்த இனிமையாகக் கற்று, அது காரணமாகக் களிப்படைந்தேன். அதனால் என்றும் சிறப்பினை அடைந்தேன் என்கின்றார்.

பற்று - விருப்பம். ஏறு - ஈண்டு ஆண் மான். சீர் - சீர்த்தி. ஏர் விடை என்று பின்வருவதால் முன் உள்ள ஏறும் உகந்தவன் என்பதற்கு ஆண்மானைக் கையில் ஏற்றுள்ளவன் என்று பொருள் கொள்ளப் பட்டது.

6 அடிநின்ற சூழல் அகோசரம்
மாலுக் கயற்கலரின்
முடிநின்ற சூழ்முடி காண்பரி
தாயிற்றுக் கார்முகிலின்
இடிநின்ற சூழ்குரல் ஏறுடை
ஏகம்ப யாம்எங்ஙனே
வடிநின்ற சூலப் படையுடை
யாயை வணங்குவதே.

பொ - ரை: கார்காலத்து மேகங்களின் இடி முழக்கினைப்போன்ற சூழ்ந்த குரலினையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட ஏகாம்பரநாதனே! உன் திருவடிகள் இருந்த இடம் திருமாலினால் அறிய முடியாததாயிற்று; பூக்கள் நிலைத்து அணியப்பட்டு வளைத்துக் கட்டிய சடைமுடியானது பிரமனால் காண இயலாததாயிற்று; இவ்வாறாக, கூரிய சூலப்படையை உடைய உன்னை நாங்கள் எவ்வாறு கண்டு வணங்கி உய்வது.

காஞ்சிபுரத்திலுள்ள ஏகம்பனே! உனது திருவடியைக் காண்டல் திருமாலுக்கு அருமையாய் இருந்தது, திருமுடியைக் காண்டல் பிரமனுக்கு அருமையாய் இருந்தது. இவ்வாறிருக்க, உன்னை நான் எவ்வாறு கண்டு வணங்குவது என்கின்றார்.

அகோசரம் - அறிய முடியாதது. வடி - கூர்மை.

7 வணக்கந் தலைநின் திருவடிக்
கேசெய்யும் மையல்கொண்டோர்
இணக்கன்றி மற்றோர் இணக்கறி
வோமல்லம் வல்லரவின்
குணக்குன்ற வில்லி குளிர்கச்சி
ஏகம்பம் பாடினல்லாற்
கணக்கன்று மற்றொரு தேவரைப்
பாடுங் கவிநலமே.

பொ - ரை: இறைவனே! உன் திருவடிகளைத் தங்கள் தலையால் வணங்கும் ஆசைகொண்ட அடியார்களது நட்பேயன்றி, வேறொருவரது நட்பினை மேற்கொள்ள மாட்டோம். வலிய பாம்பாகிய நாணினையுடைய மலையாகிய வில்லை ஏந்திய இறைவனின் சிறந்த திருக்கச்சியேகம்பத்தைப் பாடுதலன்றி, வேறொரு தேவரைப் பாடும் கவிகளைக் கவிகளாகச் சேர்த்துக் கணக்கிடக் கூடியதன்று.

ஆன்மாக்கள் என்றும் அடியவரோடு இணக்கம் கொள்ளவேண்டுமே அன்றி, அடியவரல்லாதாரோடு இணக்கம் கொள்ளல் கூடாது. நாம் அவனுடைய திருக் கச்சியேகம்பத்தைப் பாடாமல் வேறு இடத்தைப் பாடுதல் கூடாது. அவ்வாறு பாடும் பாடல் பாடலாக மக்களால் கருதப்படாது என்பதாம்.

மையல்-ஆசை. இணக்கு-நட்பு. அரவு - பாம்பு. குன்றம் - மலை. குளிர்கச்சி எனல் உன்னுதற்குரியது.

8 நலந்தர நானென்று சொல்லுவன்
கேண்மின்நல் லீர்கள்அன்பு
கலந்தர னூர்கச்சி ஏகம்பம்
கண்டு கனல்திகிரி
சலந்தரன் ஆகம் ஒழிக்கவைத்
தாய்தக்கன் வேள்வியெல்லாம்
நிரந்தர மாகச்செய் தாயென்று
பூசித்து நின்மின்களே.

பொ - ரை: நல்லவர்களே! நான் உங்களுக்கு நன்மை உண்டாக ஒருவழி சொல்கின்றேன்; அதனைக் கேளுங்கள். நீங்கள் அன்புடையவர்களாய் இறைவரது கச்சியேகம்பத்தைத் துதித்து, நெருப்பைக் கக்குகின்ற சக்கரப்படையைத் தாங்கிய சலந்தராசுரனது சரீரத்தை அழித்த தன்மையையும் தக்கனது பெரு வேள்வியினை அழித்த நிலையையும் என்றும் மனத்துள் எண்ணி வழிபட்டு நில்லுங்கள்.

நல்ல மக்களே! நீங்கள் நன்மை அடைய நான் உங்களுக்கு ஒரு வழி சொல்லுகின்றேன். இறைவன் விரும்பி உறைகின்ற கச்சியேகம்பத்தை அன்போடு வழிபட்டு, சலந்தராசுரனைக் கொன்றவனே! தக்கன் வேள்வியை அழித்தவனே! என்று கூறித் துதித்து வழிபாடு செய்யுங்கள் என்கின்றார். அன்பு இல்லாத வழிபாடு பயன்தராதாதலின் 'அன்பு கலந்து' என்றார்.

கனல் - நெருப்பு. திகிரி - சக்கரம். வேள்வி - யாகம். நிரந்தரம் - சுவடு இல்லாமல்.

9 மின்களென் ருர்சடை கொண்டலென்
ருர்கண்டம் மேனிவண்ணம்
பொன்களென் ருர்வெளிப் பாடுதம்
பொன்அடி பூண்டுகொண்ட
என்களென் ருலும் பிரிந்தறி
யார்கச்சி ஏகம்பத்தான்
றன்களென் ருருல கெல்லாம்
நிலைபெற்ற தன்மைகளே.

பொ - ரை: இறைவர் மின்னற்கொடி போன்ற சடைகளையும், நீல மேகம் போன்ற கண்டத்தையும், பொன் போன்ற நிறத்தினையுடைய திருமேனியையும் உடையவர். வெளிப்படையாகத் தம் திருவடிகளைப் பூண்டுகொண்டவர்கள் யாவரென்ருலும் அவர்களைப் பிரிந்தறியார்; ஆதலால், அவர் உலகம் முழுதும் நிலை பெற்றிருக்கும் குணங்களை உடையவர். யாவும் கச்சி யேகம்பத்தாரின் உடைமைகளே என்று எண்ணி வழிபடுங்கள்.

அறிவுடைப் பெரியோர் கச்சியேகம்பரது திருச் சடைகள் மின்னற்கொடிகள் என்றும், கண்டம் கரு மேகம் என்றும், திருமேனியின் நிறம் பொன் என்றும், உலகனைத்தும் இறைவனுடையதே என்றும் கூறுவர்.

கொண்டல் - மேகம். வண்ணம் - நிறம்.

10 தன்மையிற் குன்ருத் தவத்தோர்
இமையவர் தாம்வணங்கும்
வன்மையிற் குன்ரு மதிற்கச்சி
ஏகம்பர் வண்கயிலைப்

பொன்மயிற் சாயலுஞ் சேயரிக்
கண்ணும் புரிகுழலும்
மென்மையிற் சாயும் மருங்குலும்
காதல் விளைத்தனவே.

பொ - ரை : நல்ல குணங்களில் குறையாத தவத்தினையுடைய முனிவர்களும் தேவர்களும் வணங்கும் வலிமையில் குறையாத மதில்களால் சூழப்பட்டுள்ள கச்சியேகம்பத்தையுடைய இறைவரது வளப்பமான கயிலையிலுள்ள இலக்குமிபோல்வாளது மயில்போன்ற சாயலும், செவ்வரி படர்ந்த கண்களும், கட்டப்பட்ட கூந்தலும், நொய்மையால் தள்ளாடும் சிற்றிடையும் என்றும் என்மனத்தில் ஆசையை உண்டுபண்ணின என்கின்றார்.

இத்திருப்பாடல் தலைமகளது அவயவம் கண்ட தலைமகன் கூற்று. இலக்குமியை ஒத்த பெண்ணின் சாயலும், கண்ணும், கூந்தலும், இடையும் எனக்கு மனத்தில் ஆசையை உண்டுபண்ணின என்கின்றார். தன்மை - சத்துவ குணம். இக்குணம் தவத்தினர்க்கு இன்றியமையாதது. வன்மையாவது ஊழிக்காலத்தும் அழியாத உறுதியுடன் விளங்குதல்.

11 தனமிட் டுமைதழு வத்தழும்
புற்றவர் தம்மடியார்
மனம்விட் டகலா மதிற்கச்சி
ஏகம்பர் வான்கயிலைச்
சினம்விட் டகலாக் களிறு
வினவியோர் சேயனையார்
புனம்விட் டகலார் பகலாம்
பொழுதுநம் பூங்கொடியே.

பொ - ரை: மலர்க்கொடி போன்ற பெண்ணே! உமையம்மையானவள் தனத்தை வைத்துத் தழுவுதலால் தன் மேனியில் தழும்பைப் பொருந்தினவர், தம் அடியவரது மனங்களை விட்டு நீங்காத மதில் சூழப் பெற்ற கச்சியேகம்பமுடையவர், அவரது மேலாகிய கயிலைமலையின்கண் கோபத்தைவிட்டு நீங்காத யானையைக் காட்டி நன்மை அடைந்த முருகக்கடவுளை ஒத்த தலைவர் ஒருவர் பகற்பொழுதெல்லாம் நமது புனத்தினை விட்டுப் பிரியாமல் இருக்கின்றார்.

இப்பாடல் தோழி ஐயுறுதல். களிறு வினவிவந்த தலைமகனை நோக்கித் தோழி தலைமகளோடு கூறுவது. தலைமகன் தழைகொண்டு நின்று, கரந்த மொழியால் தன் கருத்து அறிவித்தான். அவன் மேனி ஒளிகுன்றி இருந்தது. இப்புனத்தினின்றும் போகாமல் களிறு வினவிப் பொய்கூறு நின்றான்; இவன் யாவன்? என்று தோழி ஐயுற்றாள்.

பூங்கொடி போன்ற தலைவியே! கச்சியேகம்பரது கயிலைமலையின்கண் முருகவேளை ஒப்பவராகிய ஒருவர் களிறு வினவிவந்து நம்புனத்தைவிட்டுப் பகற்போதெல்லாம் நீங்காதவராயிருக்கின்றார்; இவர் யாவர்? என்கின்றாள்.

திருக்கச்சியில் உள்ள இறைவர் தனமிட்டு உமை தழுவத் தழும்புற்றவர்.

களிறு - யானை. சேய் - முருகன். புனம் - சோலை.

12 பூங்கொத் திருந்தழை யார்பொழிற்
கச்சிஏ கம்பர்பொற்பார்
கோங்கத் திருந்த குடுமிக்
கயிலைஎம் பொன்னெருத்தி

பாங்கொத திருந்தனே ஆரணங்
கேபடர் கல்லருவி
ஆங்கத் திருந்திழை ஆடிவந்
தாற்கண் டடிவருத்தே.

பொ - ரை: அழகிய பெண்ணே! பூங்கொத்துக் களோடு கூடிய பெரிய தழைகள் நிறைந்த சோலைக ளால் சூழப்பட்ட கச்சியேகம்பமுடையாரது அழகும் மணமும் உள்ள மலர்கள் நிறைந்த சிகரத்தையுடைய கயிலைமலையின்கண் உள்ள இலக்குமியை ஒத்த பெண் ஒருத்தியின் குணங்கள் அனைத்தையும் ஒத்திருந்தாய். ஆகையால், படர்ந்த மலையருவிகளையுடைய அவ்வி டத்தில் திருந்திய ஆபரணத்தை அணிந்த தலைமகள் நீராடி வந்தாள். அவளைப் பார்த்து உனது அடியை வருத்துவாயாக.

இது வேறுபடுத்துக் கூறுதல். பிறை தொழுதல் என்பது பெண்களுக்குரிய பழங்கால மரபு. தலைவி பிறை தொழாது நாணித் தலைசாய்த்து நிலங்கிளைத்து நின்றாள். நின்ற நிலைகண்டு தலைமகள்வழியே ஒழுகி உண்மையை அறிய எண்ணிய தோழி, சுனையாடி வா என்றாள். அக்குறி அறிந்து அவளை வரையணங்காகப் புனைந்து வேறுபடுத்திக்கூறினாள்.

இரும் தழை - பெரிய தழை. பொற்பு - அழகு. குடுமி - சிகரம்.

13 வருத்தந் தருமெய்யுங் கையில்
தழையும்வன் மாவினவும்
கருத்தந் தரிக்கு நடக்கவின்
றைய கழல்நினையத்

திருத்தந் தருளுந் திகழ்கச்சி
ஏகம்பர் சீர்க்கயிலைத்
துருத்தந் திருப்பதன் றிப்புனங்
காக்குந் தொழில்எமக்கே.

பொ - ரை : மிகுந்த வருத்தத்தினைக் கொடுக்கும் உடம்பும், கையில் தழையும், யானையை வினவுதலும் ஆகிய கருத்தினால் வேறுபடும் உன் நினைவின்படியே நிகழ்க. தலைவனே! இப்பொழுது இறைவனுடைய திருவடிகளை நினைப்பவர்கட்கு நித்தியமாகிய செல்வத்தைக் கொடுக்கும் கச்சியேகம்பத்தை உடையவரது சிறப்பினையுடைய கயிலையின்கண் இந்தப் புனத்தைக் காக்கும் தொழிலையுடைய எங்களுக்குப் போவதையும் வருவதையும் ஆராய்வது தொழில் இல்லை.

இத்திருப்பாடல் எதிர்மொழி கொடுத்தல். களிறு முதலியன வினவிவந்த தலைமகனுக்குத் தோழி மறுமொழி கூறுதல். தலைவனே! உனது வாடிய மேனி, தழை, களிறு வினயமை இவை யாவுமே கருத்திற்கு மாறுபட்டு நின்றன. ஆதலின், நீ இந்தப் புனத்தை விட்டு உடன்செல்வாயாக என்று தோழி கூறினாள்.

14 எம்மையும் எம்மைப் பணிகொள்ளுங்
கம்பர் எழிற்கயிலை
உம்மையும் மானிடம் இப்புனத்
தேவிட்டு வந்தமைந்தர்
தம்மையும் மானையுஞ் சிந்தையும்
நோக்கங் கவர்வவென்றே
அம்மையும் அம்மலர்க் கண்ணும்
பெரியீர் அருளுமினே.

பொ-ரை : கச்சியேகம்பர் எங்களையும் எங்களைப் போன்றவர்களையும் என்றும் பணிகொள்பவர். கயிலை மலையில் உமாதேவியோடு வீற்றிருக்கும் இறைவரை எண்ணி நாங்கள் வாழ்கின்றோம். இந்தப் புனத்தை நீங்கி வந்த தலைமகனாகிய நீவிர் எங்கள் சிந்தையையும் எண்ணத்தையும் கொள்ளைகொண்டுவிட்டீர். ஆயினும், பெரியோர்களது அருள் இருப்பின் நீவிர் எண்ணியது கைகூடும்.

இறைவருடைய அருளும் பெரியோருடைய எண்ணமும் உங்கள்பால் உண்டாகுமாயின், நீவிர் எண்ணுவது என்றும் கைகூடும் என்று கூறப்பட்டுள்ளது.

15 அருளைத் தருகம்பர் அம்பொற்
கயிலையுள் எம்மையரம்(பு)
இருளைக் கரிமறிக் கும்மிவ
ரையர் உறுத்திஎய்ய
வெருளக் கலைகணை தன்னொடும்
போயின வில்லிமைக்கு
மருளைத் தருசொல்லி எங்கோ
விலையுண்டிவ் வையகத்தே.

பொ-ரை : உன்னை விரும்பிக் கேட்கும் ஆடவர்கட்கு மருட்சியைக் கொடுக்கும் சொற்களை உடைய தலைவியே! விரும்பிப் பணியும் அன்பர்கட்கு அருள் தருகின்ற திருவேகம்பமுடையாரது மிகவும் அழகிய பொன்மயமாகிய கயிலைமலையின்கண் உள்ள எமது தலைவர் தொடுக்கும் அம்பு, இருளைப்போன்ற கரிய அழகிய யானையையும் தடுத்து நிறுத்தும். இத்தலைவர் ஆற்றலோடு எய்ய யானைகள் வெருண்டோடும் இயல்புடையன. புள்ளியையுடைய கலைமான்களோ இவர்

எய்த அம்போடும் ஓடின. ஆகவே, இவ்வுலகத்தில் இவரது வில் வலிமைக்கு எவ்விடத்தில் ஏற்ற விலை உள்ளது? எங்கும் இல்லை.

இது தலைவனை நகுதல். களிறு முதலியன வினவி வந்த தலைமகனைத் தோழி பரிகசித்துத் தலைமகளோடு சொல்லுதல்.

மருள்-மருட்சி. வில்லிமை-வில்லை ஆளுந்தன்மை.

16 வையார் மழுப்படை ஏகம்பர்
ஈங்கோய் மலைப்புனத்துள்
ஐயா வருகலை ஏனங்
கரிதொடர் வேட்டையெல்லாம்
பொய்யான ஐயர் மனத்ததெம்
பூங்கொடி கொங்கைபொருப்
பையார் அரவிடை யாயிற்று
வந்து பரிணமித்தே.

பொ-ரை: கூரிய மழுவாயுதத்தையுடைய திரு ஏகம்பரது திரு ஈங்கோயைச்சார்ந்த மலைப்புனத்தில் அழகுடன்வரும் கலைமானையும், பன்றியையும், யானையையும் தொடர்ந்து செய்துவந்த வேட்டைமுழுதும் பொய்பட்டு ஒழிந்தன. அவ்வேட்டைகள் எல்லாம் வேறுபட்டு வந்து இப்பொழுது இவரது மனத்திலே உள்ளது. அதனால் எமது பூங்கொடி போல்வாளது தனங்களைப் பொறுக்கமாட்டாத இடையினை உடையவளாய் உள்ளாள்.

இது அறிவு ஆராய்தல். தோழி தலைவனை இவன் யாவனோ என்று ஐயுற்று, பேராராய்ச்சியுடையளாதலால் தலைமகன் கூற்றுக்கள் எல்லாம் தங்களிடைக்கே

முடிதலால் இவ்வையர் சொல் மிக்க ஆழமுடையது என்று சிந்தித்துத் தலைவனின் நினைவு இன்னதென்று அறிந்தாள்.

வை - கூர்மை. ஏனம் - பன்றி. பரிணமித்தல் - வேறுபடல்.

17 பருமுத் துதிர்த்திடுஞ் சீர்மத்த
யானை நுதல்பகுந்திட்(டு)
உருமொத்த திண்குரற் சியந்
திரிநெறி ஓங்குவைவாய்ப்
பொருமுத் தலைவேற் படைக்கம்பர்
பூங்கயி லைப்புனத்துள்
தருமுத் தனநகைத் தன்னசை
யால்வெற்ப சார்வரிதே.

பொ - ரை: உயர்ந்த கூரிய வாயினையுடைய பொருதற்கரிய முத்தலைவேற்படையைத் தாங்கிய திரு வேகம்பமுடையாரது அழகிய கயிலைவரையின்கண் உள்ள புனத்தில் வாழுகின்ற முத்துக்கள் போன்ற பற்களையுடைய தலைவியின்மேல் கொண்ட பற்றுக் காரணமாகத் தலைவனே! இடிபோன்ற வலிய குரலினை யுடைய சிங்கங்கள், கொம்பினின்று முத்துக்களைச் சிந்துகின்ற சிறந்த மதமிக்க யானையின் நெற்றியைப் பிளந்திட்டுத் திரிகின்ற அரிய வழியில் நீ வருவது அருமையான செய்கையாகும்.

இது இரவுக்குறி விலக்கல். தலைவன் இரவில் வருவதாகத் தோழியிடம் கூறத் தோழி, நீ வரும்வழி சிங்கங்கள் யானையை வேட்டையாடும் இடம் ஆதலின் தலைமகள்மீது வைத்த விருப்பம் காரணமாக இந்த

இரவில் நீ வருதல் கூடாது என்று நெறியின் அருமை கூறி, இரவு வருதலை விலக்குகின்றாள்.

நகை - பல். சீயம் - சிங்கம். சார்வு - வருதல்.

18 அரிதன் திருக்கண் இடநிரம்
பாயிரம் போதணிய
அரிதன் திருவடிக் கர்ச்சித்த
கண்ணுக் கருளுகம்பர்
அரிதன் திருக்கங் குலியால்
அழிந்த கயிலையல்லிங்(கு)
அரிதென் றிருப்பதெம் பால்வெற்ப
எம்மையர்க் கஞ்சுதுமே.

பொ - ரை: திருமால் தன்னுடைய அழகிய கண்ணைத் தோண்டி அணிய, தொகை கூடிய ஆயிரம் தாமரை மலர்கள் அடியினை அலங்கரிக்க, திருமால் தனது திருவடியின்மேல் அருச்சனை செய்த கண்ணின் பொருட்டு அருள்செய்த திருவேகம்பரது பகையாகிய இராவணனது மாறுபாட்டினைத் தனது திருவடிப் பெருவிரலால் அழித்த கயிலைமலையிலுள்ள தலைவனே! இங்கு இராக்காலத்தில் எம்மிடத்தில் தங்கியிருப்பது அருமையாக இருப்பினும், எமது தந்தை முதலிய முதியோர்கட்கு நாங்கள் அஞ்சுகின்றோம்.

தோழி கூற்று. இரவு தலைவியுடன் தங்க எண்ணிய தலைமகனுக்கு, தோழி தங்க இயலாமைக்குக் காரணம் கூறி மறுத்துரைத்தல்.

அரி - திருமால். அரி - பகைமை. அல் - இரவு.

19 அஞ்சரத் தான்பொடி யாய்விழத்
தீவிழித் தன்புசெய்வோர்
நெஞ்சரத் தாழ்வுகந் தோர்கச்சி
ஏகம்பர் நீள்கயிலைக்
குஞ்சரத் தாழ்வரை வீழநுங்
கொம்புய்யக் கும்பமூழ்கும்
வெஞ்சரத் தாரன வோவல்ல
வோவிவ் வியன்முரசே.

பொ - ரை: இறைவனுடைய நெற்றிக்கண் நோக்கினால் ஐந்து அம்புகளையுடைய மன்மதன் நீறு பட்டொழிந்தான். ஆயினும், அன்பு செய்வோர்கட்கு அவர்களது தாழ்வினை நீக்கி உகந்து, அவர்களுக்கு அருளினைச் செய்யும் இறைவர் உறையும் காஞ்சி புரத்திலுள்ள இறைவனை எண்ணி வழிபட்டால் பூங் கொம்பு போன்ற இத்தலைவி எவ்வித நலங்களும் பெற்று வாழ்வாள்.

தலைவியின் சிறப்பு. அம் - அழகு. சரத்தான் - பாணத்தையுடைய மன்மதன். கொம்பு - பூங்கொம்பு போன்ற தலைவி.

20 சேய்தந்த கைம்மை உமைகண
வன்திரு ஏகம்பத்தான்
தாய்தந்தை யாய்உயிர் காப்போன்
கயிலைத் தயங்கிருள்வாய்
வேய்தந்த தோளிநம் ஊச
லொடும்விரை வேங்கைதன்னைப்
பாய்தந்து பூசலுண் டாங்கொண்ட
தோசை பகடுவந்தே.

பொ - ரை : மூங்கில்போன்ற திரண்ட தோளும் கருநிறமும் உடைய உமையம்மைக்கு நாயகன்; திருவேகம்பமுடையவன்; தாயும் தந்தையுமாகி உயிர்களைக் காப்பவன்; இத்தகைய இறைவனது கயிலை மலையின்கண் விளங்குகின்ற இருளில், மூங்கிலை ஒத்த தோள்களையுடைய தலைவியே! ஒரு துதிக்கையை உடைய யானை வந்து நமது ஊசலுடன் மணமுள்ள வேங்கைமரத்தையும் பாய்ந்து ஒடித்துக் கைப்பற்றிக் கொண்டது. அதனால் இங்கு பேரொலி உண்டாயிற்று.

இது தாய்துயிலறிதல். தோழி தலைமகன் வருதலை உணர்ந்து தலைவியை அழைத்துச்செல்லக் கருதினள். அதற்கு உபாயமாகத் தலைமகளை நோக்கிச் சொல்வாள் போல, தலைவியே! நாம் விளையாடும் பூஞ்சோலையில் ஒரு யானை வந்து நமது ஊசலையும், அது கட்டப்பட்டிருக்கும் வேங்கைமரத்தையும் தாக்கி முறித்துவிட்டது; அதனால் பேரொலி ஏற்பட்டது; இதற்குச் செய்வது யாது? என்று கூறினள். இவ்வுபாயத்தால் தோழி தாயின் துயிலை அறிந்தாள் என்பதாம்.

வேய் - மூங்கில். ஊசல் - ஊஞ்சல். பூசல் - பேரொலி.

21 வந்து மணம்பெறின் பொன்னனை
யிர்மன்னும் ஏகம்பர்தம்
முந்து மருவிக் கயிலை
மலையுயர் தேன்இழிச்சித்
தந்து மலர்கொய்துந் தண்டினை
மேயுங் கிளிகடிந்தும்
சிந்தும் புகர்மலைக் கச்சுமிச்
சாரல் திரிகுவனே.

பொ-ரை : என்றும் நிலைபெற்றிருக்கின்ற ஏகம்ப முடையாரது அருவி ஆறுகளை உந்தாநின்ற கயிலை மலையின்கண் உயர்ந்த தேன்கூட்டை எமக்கு இறக்கிக் கொடுத்தும், மலர்களைப் பறித்துக் கொடுத்தும், தண்ணிய தினைக்கொல்லைகளில் மேய்கின்ற கிளிகளை ஓட்டியும், மதநீரைச் சொரிகின்ற பெரிய மலைபோன்ற யானைகளைக் கொன்றும் இந்த மலைச்சாரலில் திரிகின்ற தலைமகன் வந்து உங்களை மணந்துகொண்டால் நீங்கள் திருமகளை ஒத்து வாழ்வீர்கள்.

இது தோழி கூற்று. ஏகாம்பரரது கயிலைமலையில் தலைமகன் வந்து எனக்குத் தேன்கூட்டை இறக்கியும், மலர் பறித்துக் கொடுத்தும் உதவி செய்தான். அத்தலைவன் வந்து உன்னை மணஞ்செய்துகொண்டால் நீவிர் சிறப்புற்று வாழ்வீர் என்று தோழி தலைவியை வாழ்த்தினள்.

மன்னும் - நிலைத்திருக்கும். கடிந்தும் - ஓட்டியும். மலை - மலைபோன்ற யானை. கச்சும் - கொன்றும்.

22 திரியப் புரம்எய்த ஏகம்ப
னார்திக ழுங்கயிலைக்
கிரியக் குறவர் பருவத்
திடுதர எம்வினையோம்
விரியச் சுருள்முத லானும்
அடைந்தோம் விரைவிரைந்து
பிரியக் கதிர்முற்றி னீர்பெற்ற
தென் அங்குப் பேசுமினே.

பொ - ரை : திரிபுரத்தை அழித்த திருவேகம்பனார் கயிலைமலையின்கண் விளங்கிக்கொண்டு இருக்கின்றார்.

அவர், அடியேங்களாகிய எங்களது தீவினைகள் யாவையும் அழித்து நல்லருள் செய்கின்றார். அவரை வணங்காமையால் நாம் பெற்ற பயன் ஒன்றுமில்லை.

23 பேசுக யாவ ருமைக்கணி
யாரென்று பித்தரெங்கும்
பூசுகை யார்திரு நீற்றெழில்
ஏகம்பர் பொற்கயிலைத்
தேசுகை யார்சிலை வெற்பன்
பிரியும் பரிசிலரக்
கூசுகை யாதுமில் லாக்குலை
வேங்கைப் பெயர்நும்மையே.

பொ-ரை: பித்தராகிய இறைவர் என்றும் உமையோடுகூடி வாழ்வர். திருநீற்றினை நிறையப் பூசியுள்ள அவர் திருவேகம்பத்தில் உள்ளார். அந்த இறைவர் அன்புடையார்க்கு என்றும் அருள் செய்வார் என்று கூறுகின்றார்.

பித்தர் - இறைவர். வெற்பன் - தலைவன்.

24 பெயரா நலத்தெழில் ஏகம்ப
னார்பிறை தோய்கயிலைப்
பெயரா திருக்கப் பெறுகிளி
காள்புன மேபிரிவின்
துயரால் வருந்தி மனமுமிங்
கோடித் தொழுதுசென்ற(து)
அயரா துரையும்வெற் பற்கடி
யேற்கும் விடைதம்மினே.

பொ-ரை: நிலைபெயராத சிறந்த அழகினையுடைய திருவேகம்பமுடையாரது பிறைச்சந்திரன் தவழுகின்ற திருக்கயிலாய மலையினின்றும் நீங்காதிருக்கப்பெற்ற கிளிகளே! தினைப்புனமே! பிரிவினால் நேரிட்ட துன்பத்தினால் வருத்தப்பட்டு மனமும் இவ்விடத்தில் ஓடா நிற்க நான் வணங்கிச் சென்றதை மறவாமல் எமது தலைவற்குச் சொல்லுங்கள்; அடியவளாகிய எனக்கும் விடை கொடுங்கள்.

இது பகற்குறி. தலைமகளது இற்செறிவைத் தோழி அவ்விடத்துள்ள கிளி தினைப்புனம் முதலியவற்றோடு கூறி, தலைவன்வரின் யான் இப்புனம் நீங்கும்போது உற்ற துன்பத்தையும் அவரிடத்துக் கூறுமின் எனக் கூறுவது.

25 தம்மைப் பிறவிக் கடல்கடப்
பிப்பவர் தாம்வணங்கும்
மும்மைத் திருக்கண் முகத்தெழில்
ஏகம்பர் மொய்கயிலை
அம்மைக் கருங்கண்ணி தன்னொடின்
பந்தருந் தண்புனமே
எம்மைக் கவலை செயச்சொல்லி
யோவல்லி எய்தியதே.

பொ-ரை: மக்களாகிய நம்மைப் பிறவிக்கடலைக் கடக்கச் செய்பவர்; நாம் பணிகின்ற மூன்று திருக்கண்களோடு கூடிய முகத்தழகுடைய திருவேகம்பமுடையார்; அவரது நெருங்கிய கயிலைமலையில் மை எழுதப்பட்ட கரிய கண்களையுடையாளோடு சேர்ந்து நின்று, எமக்கு இன்பத்தைக் கொடுக்கும் தண்ணிய

புனமே! எங்களைத் துன்பப்படுத்தச் சொல்லியோ அவ்வணங்கு இவ்விடம் விட்டுச் சென்றது.

இதுவும் பகற்குறி. வறும்புனம் கண்டு வருந்தல். தலைவியும் தோழியும் புனங்காவல் முடிந்து, ஊருக்குச் சென்றார்களாக, தலைமகன் புனத்தினை அடைந்தான்; நாம் முன்பு பயின்ற புனம் வறிதாகிவிட்டதே என்று வருந்தினான்; தலைமகளை அவ்விடம் காணாது ஏங்கி நின்றான் என்பதாம்.

வல்லி - அணங்கு. மும்மை - மூன்று.

26 இயங்குந் திரிபுரம் எய்தஏ
கம்பர் எழிற்கயிலைத்
தயங்கு மலர்ப்பொழில் காள்தையல்
ஆடரு வித்தடங்காள்
முயங்கு மணியறை காள்மொழி
மீர்ஒழி யாதுநெஞ்சம்
மயங்கும் பரிசுபொன் னார்சென்ற
சூழல் வகுத்தெமக்கே.

பொ-ரை: ஆகாயத்தில் திரிந்த முப்புர அசுரர்களை நெற்றிக்கண்ணைக் காட்டி அழித்த திருவேகம்பப் பெருமானது அழகு பொருந்திய கயிலைமலையின்கண் விளங்குகின்ற பூஞ்சோலைகளே! அழகிய எம் தலைவி நீராடுகின்ற அருவிகளோடு பெரிய சோலையின்கண் சேர்ந்திருக்கின்ற பளிக்கறைகளே! எமது மனம் மயங்கும்வண்ணம் திருமகளை ஒத்த எம் மனைவியார் போன இடத்தை வழுவாமல் எங்களுக்கு வகுத்துச் சொல்லுங்கள்.

தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுதல். இயங்கும் - திரியும். மணி அறை - பளிக்கறை.

27 வகுப்பார் இவர்போல் மணத்துக்கு
நாள்மணந் தன்னொடின்பம்
மிகுப்பார்க ளாருயி ரொன்றும்
இருவரை விள்ளக்கள்வாய்
நெகுப்பான் மலர்கொண்டு நின்றார்
கிடக்க நிலாவுகம்பர்
தொகுப்பான் மணிசிந் தருவிக்
கயிலைஇச் சூழ்புனத்தே.

பொ - ரை: மலர்கள் வாய்விண்ட அளவில் அவ் வாயினின்றும் தேன் சிந்தும்படி மலரேந்தி நின்றவர் பணிந்து கிடக்க விளங்குகின்ற திருவேகம்பமுடையா ரது தொகுதிகளாக மணிகளைச் சிதறுகின்ற அருவி களையுடைய திருக்கயிலை மலையின்கண்ணுள்ள இந்த மரங்கள் சூழ்ந்த புனத்துள், மணக்குங்காலத்தோடு இன்பம் மிகுவிப்பார்களாய், அரிய உயிர் ஒன்றுந் தன்மையுள்ள இருவரை மணம் புணர்வித்தற்கு நாள் வகுத்துச் சொல்பவர்கள் இக்கணியாரே போலும்.

இது தோழி கூற்று. வேங்கை அரும்பிப்பூத்ததால் தினை கொய்யுங்காலம் கிட்டிவிட்டது. தினை கொய்து விட்டால் தலைவியை இற்செறிப்புச் செய்து விடுவார் கள். இனி, இத்தலைவிக்குக் கடிமணம் செய்யும் காலம் வந்துற்றமையை அறிவுறுத்தவேண்டும்.

மலர்கொண்டு நின்றார் என்றது பிரமன் இந்திரன் முதலியோரை. போல்-போலும். இவர் என்ற சொற்கு இடத்திற்கேற்ப வேங்கை என்று பொருள் உரைக்கப் பட்டது.

28 புனங்குழை யாதென்று மென்தினை
கொய்ததும் போகலுற்ற
கனங்குழை யாள்தற் பிரிய
நமக்குறுங் கையறவால்
மனங்குழை யாவருங் கண்கனி
பண்பல பாடுந்தொண்டர்
இனங்குழை யாத்தொழும் ஏகம்பர்
இக்கயி லாயத்துள்ளே.

பொ - ரை: மனம் உருகி அருமையாகிய கண் கசிந்து பல பண்களை இசையோடு பாடுகின்ற அடியவர் கூட்டம் உடல் குழைந்து வணங்கும் திருவேகம்ப முடையாரது இந்தக் கயிலாயவரையின்கண் புனம் வாடாதென்று கருதி மெல்லிய தினையைக் கொய்தலும் செல்லலுற்ற அழகிய குழையையுடையாளாகிய தலைவி யைப் பிரியவே துன்பம் நம்மை வந்தடையும்.

இது தலைவன் கூற்று. கயிலையை ஒத்த இந்த நகரிடையுள்ள இப்புனத்துத் தினை கொய்தலும் தினை காத்த தலைவி பிரியவே நமக்குத் துன்பம் வந்துநேரும் என்று தலைமகன் கூறுகின்ருன்.

கனி - கசிந்து. கையறவு - துன்பம்.

29 உள்ளம் பெரியரல் லாச்சிறு
மானுடர் உற்றசெல்வம்
கள்ளம் பெரிய சிறுமனத்
தார்க்கன்றிக் கங்கையென்னும்
வெள்ளம் பெரிய சடைத்திரு
ஏகம்பர் விண்ணரணம்
தள்ளம் பெரிகொண் டமைத்தார்
அடியவர் சார்வதன்றே.

பொ - ரை : மனம் பெரியரல்லாத சிறு மனிதர் தாங்கள் அடைந்த செல்வம் பெரிய வஞ்சகத்தை யுடைய சிறு மனத்தையுடையவர்க்குப் பொருந்துமே அன்றி, கங்கை என்கிற ஆறு தங்கப்பெற்ற பெரிய சடையையுடைய திருவேகம்பமுடையவர் ஆகாயத்தில் திரிகின்ற மும்மதில்களை அழிக்கவல்ல ஓர் அம்பை நெருப்பைக்கொண்டமைத்தவர், அவரது அடியார்களுக்குப் பொருந்துவதன்று.

உள்ளம் பெரியர் என்பது பெருங்குணம் உடைமையை உணர்த்தும். சிறு மானுடர் என்போர் கீழ் மக்கள். அம்பு என ஈண்டு வரையறை கூறவில்லை ஆயினும், முன்னோர் நூல்களுள் கூறியுள்ளமையே ஈண்டும் கூறப்பட்டது. 'ஒருங்கட மூவெயி லொற்றைக் கணைக்கொள் சிற்றம்பலவன்' எனவும், 'ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில், ஓரம்பே முப்புரம் உந்தீபற, ஒன்றும் பெருமிகை உந்தீபற' எனவும் கூறப்பட்டுள்ளமை காண்க. தீயவழியில் ஒருவன் செல்வத்தை ஈட்டினல், அது தீயவர்க்குப் பயனளிக்குமன்றி நல்லவர்க்குப் பயன்தராது என்பதாம்.

30 அன்றும் பகைஅடர்க் கும்பரி
மாவும் மதவருவிக்
குன்றும் பதாதியுந் தேரும்
குலவிக் குடைநிழற்கீழ்
நின்றும் பொலியினுங் கம்பர்நன்
னீறு நுதற்கிலரேல்
என்றும் அரசும் முரசும்
பொலியா இருநிலத்தே.

பொ - ரை : நெருங்குகின்ற பகைவரைக் கொல்லுகின்ற குதிரையும், மதத்தைச் சொரியும் யானையும்,

காலாளும், தேரும் ஆகிய நாற்படைகளும் விளங்கி வெண்கொற்றக்குடை நிழலின்கீழ் ஒருவர் வீற்றிருந்து ஆட்சிசெய்து விளங்கினாலும், அத்தகையோர் திரு ஏகம்பமுடையாரது திருநீற்றுப்பொடி தமது நெற்றியின்கண்ணே உடையவரல்லராயின் அவர்க்கு எந்தக் காலத்தும் பெரிய உலகத்தின்கண் அரசாட்சியும் முரச வாத்தியமும் பொலிவினைத் தராவாம்.

குதிரை முதலாய நால்வகைப் படைகளை ஒருவன் பெற்றுப் பேரரசனாக விளங்கினாலும், அவன் ஏகம்பரது திருநீற்றை அணியானாயின் அவனது செல்வம் பயன் தராது அழியும் என்பதாம்.

பரிமா-குதிரை. பதாதி-காலாள். நீறு-திருநீறு.

31 நிலத்திமை யோரில் தலையாய்ப்
பிறந்து மறையொடங்கம்
வலத்திமைப் போதும் பிரியா
எரிவளர்த் தாலும்வெற்பன்
குலத்துமை யோர்பங்கர் கச்சியுள்
ஏகம்பங் கூடித்தொழும்
நலத்தமை யாதவர் வேட்டுவர்
தம்மின் நடுப்படையே.

பொ - ரை : உலக மக்களுள் அறிவுடைய முதன் மகனாகப் பிறந்து, வேதங்களோடு ஆறு அங்கங்களையும் கற்று, கற்ற அவ்வலிமையால் இமைப்பொழுதும் நீங்காதவராகி, முத்தியை வளர்ப்பாராயினும் மலையரையன் குலத்திலுதித்த உமாதேவியை ஒருபாகத்திலுடையவரது திருக்கச்சியேகம்பத்தை அடைந்து வணங்குகின்ற நல்ல நெறியில் அமைந்திராதவர்கள் வேடுவரது நடுப்படையில் பிறந்தவரே ஆவர்.

நிலத்திமையோர் - அந்தணர்; பூசுரர் என்பதும் காண்க. மறை நான்கு : இருக்கு, யசுர், சாமம், அதர்வணம். அங்கம் ஆறு : சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம் என்பன. முத்தீ - ஆகவநீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி என்பன. மறை- வேதம். நலம் - நல்ல நெறி.

அந்தணராகப் பிறந்து, வேதம் முதலியன கற்று முத்தீ வேட்டாராயினும் கச்சியேகம்பத்தை அடைந்து சிவபெருமானை வணங்காராயின், வேட்டுவகுலத்தில் பிறந்தவர்க்கு ஒப்பாவார் என்பதாம்.

32 படையால் உயிர்கொன்று தின்று
பசுக்களைப் போலச்செல்லும்
நடையால் அறிவின்றி நாண்சிறி
தின்றி நகும்குலத்தில்
கடையாய்ப் பிறக்கினுங் கச்சியுள்
ஏகம்பத் தெங்களையா
ளுடையான் கழற்கன்ப ரேல்அவர்
யாவர்க்கும் உத்தமரே.

பொ - ரை. ஆயுதங்களால் உயிர்களை வதைத்து உண்டு விலங்குகளைப்போல ஒழுகுகின்ற தீயொழுக்கத்தால் நல்லுணர்வில்லாமலும், வெட்கம் சிறிதும் இல்லாமலும் சிரித்தற்குரிய சாதியில் கடையராய்ப் பிறந்தாலும் திருக்கச்சியேகம்பத்துள் வீற்றிருக்கின்ற எம்மை ஆளுடையானது திருவடிகட்கு அன்புடையராயின் அவர்களே எல்லாரினும் சிறந்தவர்கள்.

உலகில் ஒருவர் இழிந்த குலத்தில் பிறந்தாரெனினும் அவர் கச்சியேகம்பன் திருவடிக்கு அன்பராயின், உயர்குலத்தார் எல்லாரினும் மிகச்சிறந்தவராவர்.

"படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன், உடல்சுவை உண்டார் மனம்'' என்னும் குறள் ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.

நடை - தீயொழுக்கம். நகும் - கீழ்ப்பட்ட.

53 உத்துங்க யானை உரியார்
விரலால் அரக்கன்சென்னி
பத்துங்கை யான இருபதும்
சோர்தர வைத்திலயம்
ஒத்துங்கை யால்அவன் பாடக்
கயிலையி னூடுகைவாள்
எத்துங்கை யானென் றுகந்தளித்
தார்கச்சி ஏகம்பரே.

பொ-ரை: உயர்ந்த யானையின் தோலை உடையாக அணிந்தவரும், இராவணனது பத்துத் தலைகளும் இருபது தோள்களும் வருந்தக் கால்விரலால் அழுத்தி வைத்துத் தாளத்தை ஒத்துகின்ற கைகளை உடையவனாய் இசையுடன்கூடிய பாட்டைப் பாட திருக்கயிலாயமலையில் எழுந்தருளியிருந்தவரும் இவன் எத்தனையும் வருந்தமாட்டான் என மகிழ்ந்து அவனுக்கு நல்ல கைவாள் ஒன்றை அளித்துச் கருணைசெய்தவரும் கச்சியேகம்பமுடையாரே ஆவர்.

இலயம் - தாளவொற்று. இறைவனின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது.

54 அம்பரங் கால்அனல் நீர்நிலம்
திங்கள் அருக்கன்அணு
வம்பரங் கொள்வதோர் வேழத்
துரியவன் றன்னுருவாம்

எம்பரன் கச்சியுள் ஏகம்பத்
தான்இடை யாதடைவான்
நம்பரன் றன்னடி யாரறி
வார்கட்கு நற்றுணையே.

பொ - ரை : ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், பூமி, சந்திரன், சூரியன், ஆன்மா, அழகாகிய கவசமாகக் கொள்ளுதற்குரிய ஒப்பற்ற யானைத்தோல் ஆகிய இவைகள் அவன் தன் திருமேனியாகப் பெற்ற எம் இறைவன், திருக்கச்சியேகம்பமுடையான், சலியாது அன்பர்கள் அடையும் பொருட்டு நம்புகின்ற அரன் என்னும் திருப்பெயருடையவன், தன் அடியார்களாகிய அறிஞருக்கு நல்ல துணையாக இருப்பவன்.

இப்பாடல் இறைவனின் எட்டு உருவம் இன்னது என்று விளக்குகின்றது. தேவாரங்களில் பல இடங்களில் இக்குறிப்பினைக் காணலாம்.

அணு - ஆன்மா.

35 துணைத்தா மரையடி யும்பவ
ளத்திரள் நன்குறங்கும்
பணைத்தோ ளகலமுங் கண்டத்து
நீலமும் அண்டத்துமின்
பிணைத்தா லனசடை யுந்திரு
முக்கணும் பெண்ணொர்பக்கத்(து)
அணைத்தார் எழிற்கம்பர் எங்கள்
பிரானுர்க் கழகியவே.

பொ - ரை : தாமரைமலர்போன்ற இருதிருவடிகளும், பவளத்திரட்சி போன்ற அழகிய தொடைகளும்,

பருமையாகிய தோள்களை உடைய அகன்ற அழகிய மார்பும், கருநீல நிறமுடைய திருக்கழுத்தும், ஆகாயத்தில் மின்னற்கொடிகள் திரண்டிருந்தாற்போன்ற சடை முடியும், அழகிய முக்கண்களும், பெண்ணை ஒரு பாகத்தில் அணைத்திருப்பவரும், அழகையுடைய திருவேகம்பமுடையவரும் ஆகிய எம் இறைவர்க்கு இவைகள் அழகுள்ளனவாய் அமைந்து விளங்கின.

இது இறைவனது திருமேனிச்சிறப்பை விளக்குகின்றது. இதன் கருத்துக்களைப் பல அடியார்களது பாடல்களும் வலியுறுத்தும். 'மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை' என்றபாடற்பகுதியும், 'ஏர்கொள் முக்கண்' என்ற திருக்கோவையாரடியும் ஈண்டு ஒப்புநோக்கற்குரியது.

துணை - இரண்டு. குறங்கு - தொடை.

36 அழகறி விற்பெரி தாகிய
ஏகம்பர் அத்தர்கொற்றம்
பழகறி விற்பெரி யோர்தமைப்
பற்றலர் பற்றும் அன்பின்
குழகறி வேற்பினுள் ஒன்றறி
யாரறி யாமைதெய்வம்
கிழகெறி யப்பட் டுலந்தார்
உலகிற் கிடந்தனரே.

பொ - ரை: அழகானது ஒருகாலும் அழிதலில்லாத திருவேகம்பத்தை இடமாக உடையவர், எல்லா உயிரினங்களுக்கும் தந்தையாய் இருப்பவர், அவரது வெற்றிச் சிறப்பில் பழகிய அறிவில் சிறந்தோரைப் பற்றிலர், பற்றுதற்கு உரிய அன்பினது அழகாகிய அறிவு என்று ஏற்றுக்கொள்ளுதற்கு உரியவைகளுள்

ஒன்றையும் அறிந்திலர், அறியாமையின் காரணமாக ஊழிஞல் கீழ்நிலேயில் தள்ளப்பட்டு அழிந்தவராகி உலகத்தில் கிடந்தார் சிலர் என்பதாம்.

கொற்றம் - புகழ். குழகு - இளமை. கிழகு - கீழ் நிலே. திருவேகம்பரது புகழை உணராதார் உலகத்தில் பாவஞ்செய்தவர்கள் ஆவார்கள்.

37 கிடக்கும் ஒருபால் இரைக்கின்ற
பாம்பொரு பால்மதியம்
தொடக்குண் டிலங்கும் அலங்கும்
திரைக்கங்கை சூடுங்கொன்றை
வடக்குண்டு கட்டத் தலேமாலே
வாளால் மலேந்தவெம்போர்
கடக்கும் விடைத்திரு வேகம்பர்
கற்றைச் சடைமுடியே.

பொ - ரை: வாள் கொண்டு மலேந்த கொடிய போர்களே வென்ற இடபத்தையுடைய திருவேகம்பமுடையாரது திரண்ட சடைமுடியின் ஒருபக்கத்தில் சீறுகின்ற பாம்பு கிடக்கும், ஒரு பக்கத்தில் சந்திரன் கட்டுண்டு விளங்கிநிற்கும், அலேகளேயுடைய கங்கை ஒருபக்கத்தில் அசையாமல் இருக்கும், ஒருபக்கத்தில் கொன்றை மலர்மாலே சூடப்பட்டிருக்கும், கட்டப் பட்ட அந்தத் தலேமாலேகள் ஒருபக்கத்தில் அசைந்து கொண்டிருக்கும்.

இறைவனிடம் உள்ள பொருள்கள் இன்னவை யென்று இப்பாடல் விளக்குகின்றது.

38 கற்றைப் பவளச் சடைவலம்
பூக்கமழ் கொன்றையந்தார்
முற்றுற் றிலாமதி யின்கொழுந்
தேகம்பர் மொய்குழலாம்
மற்றைத் திசையின் மணிப்பொற்
கொழுந்தத் தரங்கழுநீர்
தெற்றிப் பொலிகின்ற சூட்டழ
காகித் திகழ்தருமே.

பொ - ரை: திருவேகம்பமுடையாரது வலப்பக்கத்தில் உள்ள திரட்சியாகிய பவளம்போலும் சிவந்த சடையினிடத்து மலர்கள் மணக்கப்பெற்ற அழகிய கொன்றையும், கலைகள் நிறைந்த இளம் பிறையும் விளங்கிக்கொண்டிருக்கும். மற்ற இடப்பக்கத்தில் பொற்கொழுந்து போல்பவளாகிய உமாதேவியினது நெருங்கிய கூந்தலின்கண் மேன்மையாகிய கழுநீர் மலர்களால் தொடுக்கப்பட்டு விளங்குகின்ற மாலை அழகாக ஒளிவிட்டு விளங்கும்.

இதில் இறைவன் உமையொருபாகனாக விளங்கும் அர்த்தநாரிசுரவடிவம் விளக்கப்படுகின்றது.

39 தருமருட் டன்மை வலப்பாற்
கமலக்கண் நெற்றியின்மேல்
திருமலர்க் கண்பிள வின்திக
ழுந்தழல் செல்வக்கம்பர்
கருமலர்க் கண்ணிடப் பாலது
நீலங் களிமதத்து
வருநுதற் பொட்டணங் குக்குயர்ந்
தோங்கும் மலர்க்குழலே.

பொ - ரை : செல்வப்பொலிவுடன் விளங்கும் திருவேகம்பரது வலப்பக்கத்தில் அருளைக் காட்டும் தாமரைமலர் போன்ற கண்ணும், நெற்றியினிடத்து நெருப்புப் பிளவுபோல் ஒளி விளங்குகின்ற அழகாகிய மலர்க்கண்ணும் உள்ளன. இடப்பக்கத்தில் உள்ள கரிய மலர்க்கண், நீலமலர்போல முதிர்ந்து மதர்த்து விளங்கும். நெற்றிப்பொட்டினையுடைய பெண்ணுக்கு மலரை அணிந்துள்ள கூந்தல் நீண்டு விளங்கும்.

40 மலர்ந்த படத்துச்சி ஐந்தினும்
செஞ்சுடர் மாமணிவிட்(டு)
அலர்ந்த மணிக்குண் டலம்வலக்
காதினில் ஆடிவரும்
நலந்திரு நீள்வயி ரம்வெயிற்
பாய நகுமணிகள்
கலந்தசெம் பொன்மக ரக்குழை
ஏகம்பர் காதிடமே.

பொ.- ரை : விரிந்த படத்தோடு கூடிய ஐந்து உச்சியிலும் மாணிக்கங்கள் செவ்வொளி பரப்பி, ஒளி மயமான இரத்தினகுண்டலம் என்னும் காதணி வலக் காதில் அசைந்துகொண்டிருக்கும். ஏகம்பரது இடக் காதில் நன்மையாகிய அழகு மிகுந்த வயிரமும் வெயில் விரிகின்ற சிறந்த ஏனைய மணிகளும் சேர்ந்த செம் பொன்னால் இயன்ற மகரகுண்டலம் அசைந்துகொண் டிருக்கும்.

41 காதலைக் கும்வலத் தோள்பவ
ளக்குன்றம் அங்குயர்ந்து
போதலைக் கும்பனிப் பொன்மலை
நீற்றின் பொலியகலம்

தாதலைக் குங்குழல் சேர்பணைத்
தோள் நறுஞ் சாந்தணிந்து
சூதலைக் கும்முலை மார்பிடம்
ஏகம்பர் சுந்தரமே.

பொ - ரை: காதுகளால் அலைக்கப்படுகிற வலப்புயம் பவளமலை, திருவெண்ணிறணிந்து பொலிவுடன் விளங்கும் மார்பு அவ்விடத்து உயர்ந்து மலர்களால் அலைக்கப்படுகிற குளிர்ந்த பொன்மலை; மகரந்தப் பொடி அலைக்கப்படுகிற கூந்தலையுடையாளது சேர்ந்த மூங்கிலைப்போன்ற தோள், நறுமணமுள்ள சந்தனம் அணிந்து சூதாடுகருவியை அலைக்கின்ற கொங்கையை உடைய இடத்திருமார்பு; இதுவே ஏகம்பரது அழகிய திருவுருவமாகும்.

*42* தரம்பொற் பழியும் உலகட்டி
எய்த்துத் தரந்தளரா
உரம்பொற் புடைய திருவயி
ரும்வலம் உம்பர்மும்மைப்
புரம்பொற் பழித்தகம் பர்க்குத்
தரத்திடு பூண்முலையும்
நிரம்பப் பொருது தளரிள
வஞ்சியும் நேர்வுடைத்தே.

பொ - ரை: மேலிடத்துள்ள முப்புரங்களின் அழகையழித்த திருவேகம்பமுடையார்க்கு உலகத்தை ஈன்று இளைத்து மேன்மை குன்றாத வலிய அழகினை உடைய திருமார்பு வலப்பக்கத்திலுள்ளது. இடப் பக்கத்து மேன்மையாய் அணியப்பட்ட ஆபரணங்களை

உடைய கொங்கையும், அது முதிரப் பொறுக்கலாற்ருது துவள்கின்ற வஞ்சிக்கொடிபோன்ற இடையும் விளங்குகின்றன.

43 உடைப்புலி ஆடையின் மேலூர
கக்கச்சு வீக்கிமுஞ்சி
வடத்தொரு கோவணந் தோன்றும்
அரைவலம் மற்றையல்குல்
தொடக்குறு காஞ்சித் தொடுத்த
அரசிலை தூநுண் துகில்
அடற்பொலி ஏறுடை ஏகம்பம்
மேய அடிகளுக்கே.

பொ-ரை: வெற்றி மிகுந்து விளங்குகின்ற இடப வாகனத்தை உடைய திருவேகம்பமுடையார்க்கு அரையின் வலப்பக்கத்தில் தாம் உடைத்தாயிருக்கிற புலியாடையின்மேல் பாம்பாகிய கச்சையைக் கட்டி, தருப்பைக் கயிற்ருேடு ஒரு கோவணமும் தோன்றி விளங்கும்; மற்றை இடப்பாகத்திலே உள்ள அல்குற்றடத்தில் அணியப்பட்ட காஞ்சியினுல் அலங்கரிக்கப்பட்ட அரசிலைமேல் கிடந்த பரிசுத்தமாகிய நுண்ணிய ஆடை தோன்றி விளங்கும்.

காஞ்சி - எண்கோவைமணி. முஞ்சி - தருப்பை.

44 அடிவலப் பாலது செந்தா
மரையொத் ததிர்கழல்சூழ்ந்(து)
இடிகுரற் கூற்றின் எருத்திற
வைத்த திளந்தளிரின்

அடிஇடப் பாலது பஞ்சுற
அஞ்சுஞ் சிலம்பணிந்த
வடிவுடைத் தார்கச்சி ஏகம்பம்
மேய வரதருக்கே.

பொ - ரை : இறைவனது வலப்பக்கத்துத் திருவடியானது, செந்தாமரைமலரைப் போன்று விளங்கி ஒலிக்கின்ற வீரக்கழல் அணியப்பெற்று, இடிபோன்ற குரலையுடைய யமனது பிடர் ஒடியும்படி வைக்கப் பட்டது. இளந்தளிர் போன்ற இடப்பக்கத்திலுள்ள திருவடியானது, பஞ்சுதீண்ட அஞ்சிநிற்கும்; மேலும் சிலம்பைத் தரித்த உருவினை உடைத்தாயிருக்கின்றது திருக்கச்சி ஏகம்பத்தில் வீற்றிருக்கின்ற இறைவனுக்கு என்றவாறு.

இறைவன் கூற்றையுதைத்த வரலாறு எண்ணுதற் குரியது. வரதர் - அன்பர். எருத்து - பிடர். உற - தீண்ட.

45 தருக்கவற் றான்மிக்க முப்புரம்
எய்தயன் றன்தலையை
நெருக்கவற் றேட மழுவாள்
விசைத்தது நெற்களென்றும்
பருக்கவற் றுங்கச்சி ஏகம்ப
ரத்தர்தம் பாம்புகளின்
திருக்கயிற் றலிட் டருளுங்
கடகத் திருக்கரமே.

பொ - ரை : நெற்பயிர்கள் எக்காலத்தும் செழிக்க வல்லனவாதற்குரிய திருக்காஞ்சியிலுள்ள திருவேகம் பத்தை உடையவர், மக்களுக்கெல்லாம் தந்தையாய்

இருப்பவர்; அவரது பாம்புகளாகிய அழகிய கயிறுகளான் அமைத்தருளிய கங்கணத்தை அணிந்த திருக்கையானது அகங்கார குணங்களாகிய அவைகளால் மிகுந்த திரிபுரத்தை அம்பெய்து அழித்து, பிரமனது தலையை நெருக்கும் தொழில்களாகிய அவைகளுடன் அழகிய மழுவின் ஒளியோடு வேகங்கொண்டிருந்தது.

காஞ்சிபுரத்தில் உள்ள இறைவரது திருக்கரம் முப்புரங்களை அழிக்க அம்பெய்து, பிரமன் தலையினை அறுத்த மழுவினையும் உடைத்தாயிருந்தது.

46 கரத்தத் தமருகத் தோசை
கடுத்தண்டம் மீபிளப்ப
அரத்தத்த பாதம் நெரித்திட்
டவனி தலம்நெரியத்
தரத்தத் திசைகளுக் கப்புறம்
போர்ப்பச் சடைவிரித்து
வரத்தைத் தருகம்பர் ஆடுவர்
எல்லியும் மாநடமே.

பொ - ரை: தமது அடியார்கள் விரும்பும் வரங்களைக் கொடுத்தருளுகின்ற திருவேகம்பமுடையார், தமது திருக்கரத்துள்ள தமருகத்தின் தொனியானது வேகங்கொண்டெழுந்து அண்டமுகடு பிளக்கவும், மேன்மையுள்ள திருப்பாதத்தைச் சாய்த்திட்டு பூதலம் நெரியவும், திடத்தையுடைய அந்தத் திக்குகளுக்கு அப்புறத்தும் மூடிக்கொள்ளும்படி சடையைவிரித்துக் கொண்டு இராக்காலத்திலும் பெரிய நடனம் ஆடிக் கொண்டிருப்பர்.

இப்பாடல் சர்வசங்காரகாலத்தைக் குறிக்கின்றது. கடுத்து - வேகங்கொண்டு. எல்லி - இரவு.

47 நடனம் பிரான்உகந் துய்யக்கொண்
டானென்று நான்மறையோர்
உடன்வந்து மூவா யிரவர்
இறைஞ்சி நிறைந்தஅன்பின்
கடனன்றி மற்றறி யாத்தில்லை
அம்பலங் காளத்தியாம்
இடமெம் பிரான்கச்சி ஏகம்பம்
மேயாற் கினியனவே.

பொ - ரை ; எமது இறைவனாகிய கச்சியிலுள்ள ஏகம்பமுடையானுக்குத் திருநடனம் செய்வோன் நம்பெருமான் விரும்பி நம்மை உய்யக்கொண்டவன் என்று சொல்லி நன்மையைத் தருகின்ற வேதபாரகருடனே தில்லை மூவாயிரவர் வந்து வணங்கி நிரம்பிய அன்புசெய்தலாகிய கடமையல்லது வேறொன்றையும் அறியாத தில்லையம்பலமும் திருக்காளத்தியும் இனிமை தருவனவாகிய இடங்களாம்.

திருவேகம்பமுடையாருக்குத் தில்லையம்பலமும் திருக்காளத்தியும் இனிது வீற்றிருக்கும் இடங்களாம். கடன் - கடமை. உகந்து - விரும்பி.

48 இனியவர் இன்னா ரவரைஒப்
பார்பிறர் என்னவொண்ணாத்
தனியவர் தைய லுடனும்
உருவர் அறம்பணித்த
முனியவர் என்றும் உகந்தமுக்
கண்ணவர் சண்டிஅன்புக்(கு)
இனியவர் காய்மழு வாட்படை
யார்கச்சி ஏகம்பரே.

பொ - ரை : அன்புடையரெல்லாருக்கும் இனிய வரும், அவரை ஒத்தவர் பிறரொருவருள்ளார் என்று சொல்ல ஒண்ணுத ஒப்பற்றவரும், ஒருபெண்ணேடு கூடிய திருமேனியை உடையவரும், அறநூல்களைப் பணித்தருளிய அந்தணரும், எக்காலத்திலும் தாம் உடைத்தாயிருக்க விரும்பிய முக்கண்களையுடையவ ரும், சண்டேசுவரர் அன்புக்கு இனிமையானவரும், சுடுகின்ற மழுவாகிய வாட்படையை உடையவரும் யாவரென்று வினவின் அவர் கச்சியேகம்பராவர்.

அறநூல் உபதேசித்தவர் தட்சிணமூர்த்தி. சநகர் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்தார். காய் மழு - சுடுகின்ற மழு.

49 பரவித் தனை நினை யக்கச்சி
ஏகம்பர் பண்ணும் மையல்
வரவித் தனையுள்ள தெங்கறிந்
தேன்முன் அவர்மகனர்
புரவித் தனையடிக் கக்கொடி
தாய்விடி யா இரவில்
அரவித் தனையுங்கொண் டார்மட
வார்முன்றில் ஆட்டிடவே.

பொ - ரை : தன்னைத் துதித்து நினையும்வண்ணம் திருவேகம்பமுடையவர் உண்டாக்குகின்ற மையலின் வருகை இவ்வளவு உளதென்பதைப் பண்டு எங்கே அறிந்தேன்; அவர் புதல்வராகிய முருகக் கடவுளது வாகனமாகிய மயில் தன்னை யடித்தலால் கொடியதாகி விடியாதிருக்கிற இரவின்கண் பாம்பாகிய இதனையும் மாதர்முற்றத்தில் ஆட்டும்பொருட்டுக் கைக்கொண் டிருக்கின்றனர்.

ஏகம்பர் இரவிலும் மாதர்முற்றத்தில் பாம்பாட்டும் பொருட்டுப் பாம்பைக் கைக்கொண்டிருக்கின்றனர். இவரது மாயத்தை நான் முன்னர் அறியவில்லையே என்று தலைவி கூறுகின்றாள்.

தனை - தன்னை : தொகுத்தல் விகாரம். புரவி என்றது முருகன் வாகனமாகிய மயிலை.

50 இடவஞ் சுறுக்கெனப் பாயும்அஞ்
சென்னி நகுதலைகண்(டு)
இடவஞ் சுவர்மட வார்இரி
கின்றனர் ஏகம்பத்தீர்
படமஞ்சு வாயது நாகம்
இரைக்கும் அதனுக்குமுற்
படவஞ் சுவர்எங்ஙனேபலி
வந்திடும் பாங்குகளே.

பொ - ரை : திருவேகம்பமுடையவரே! உமது இடபமோ சுறுக்கெனப் பாய்கின்றது. அழகிய தலையினிடத்து விளங்கும் தலைமாலைகளைப் பார்த்து மாதர் பலியிட அஞ்சுகின்றனர். அல்லாமலும் ஓடுகின்றனர். படத்தோடு கூடிய ஐந்து வாயினை உடையதாகிய நாகம் சீறும், அதனால் அதற்கு எதிரில் வர அஞ்சுவர்; இவ்வாறாயின் உமக்குப் பலிவரும் வழிகள் எவ்வாறு உண்டாகும்.

இப்பாடல் இறைவர் பலியேற்க வருகின்றபோது பலியிடுதற்குவரும் பெண்கள் அடையும் துன்பத்தை விளக்குவது.

சுறுக்கு - விரைவு. படம் - பாம்பு. நகு தலை - சிரிக்கின்ற தலை.

51 பாங்குடைக் கோட்புலி யின்அதள்
கொண்டீர்நும் பாரிடங்கள்
தாங்குடை கொள்ளப் பலிகொள்ள
வந்தீர் தடங்கமலம்
பூங்குடை கொள்ளப் புனற்கச்சி
ஏகம்பம் கோயில்கொண்டீர்
ஈங்கிடை கொள்ளக் கலைகொள்ள
வந்தீர் இடைக்குமின்றே.

பொ - ரை : தடாகங்கள் தாமரை மலர்களாகிய அழகிய குடைகளை யேந்திநிற்க நீர்வளம் மிக்க கச்சி ஏகம்பத்தைத் திருக்கோயிலாகக் கொண்டிருப்பவரே! அழகுள்ள ஆடையாகத் துன்பஞ்செய்யும் இயல்புள்ள புலித்தோலைத் தரித்தீர்; உம்முடைய பூத கணங்கள் குடையேந்திவர நீர் பலியேற்க வந்தீர் ; இடையான காலத்திலும் இப்பொழுது இவ்விடத்து இடையில் தரித்த அந்த ஆடையையும் கவரவந்தீர்; இது என்ன வியப்பு.

இறைவர் எல்லாவற்றையும் தம்முடையதாக்கிக் கொள்வர் என்பது கருத்து. அதள் - தோல்.

52 இடைக்குமின் தோற்கும் இணைமுலை
யாய்முதி யார்கள்தஞ்சொல்
கடைக்கணன் ஞுங்கச்சி ஏகம்பர்
ஐயங் கொளக்கடவும்
விடைக்குமுன் தோற்றநில் லேநின்
றினிஇந்த மொய்குழலார்
கிடைக்குமுன் தோற்றநஞ் சங்கிது
வோதங் கிறித்துவமே.

பொ - ரை: திருக்கச்சியேகம்பர் ஐயம் ஏற்க வருங்கால் நுண்ணிய இடையுடைய மகளிர் முதிய பெண்களின் சொல்லையும் கேளாது தங்களது கடைக் கண் பார்வையால் அவ்விறைவரது அழகினை அனுப விப்பர். அத்தகைய இறைவர் விடையில் வருங்காலம் எதுவோ என்று ஏங்குவார்கள் என்பதாம்.

53 கிறிபல பேசிச் சதிரால்
நடந்து விடங்குபடக்
குறிபல பாடிக் குளிர்கச்சி
ஏகம்பர் ஐயங்கொள்ள
நெறிபல வார்குழ லார்மெலி
வுற்ற நெடுந்தெருவில்
செறிபல வெள்வளை போயின
தாயர்கள் தேடுவரே.

பொ - ரை: பொய்மொழிகள் பல பேசி ஒழுங் காக நடந்து, அழகிய பல கருத்து அமைந்த பாடல் களைப் பாடி, அதனால் உளங்குளிர்ந்த கச்சியேகம்ப முடையார் பலி ஏற்கப் பலவாகிய நெரிந்த நீண்ட கூந்தலையுடைய பெண்கள் மெலிவடைந்து நின்ற நீண்ட தெருக்களில் அம்மாதர்களின் கையினின்றும் கழன்று போயினவாகிய நெருங்கிய பல வெள்ளிய வளையல்களை அந்தப் பெண்களுடைய தாய்மார்கள் தேடுவாராயினார்கள்; இஃது என்ன விந்தை.

*இறைவர் தெருவில் பலியேற்கவர அவரது அழகு முதலியவற்றைக் கண்டு மையலுற்ற பெண்களுடைய வளையல்கள் கழன்று கீழேவிழ, அந்த வளையல்களை*

அப்பெண்களது தாய்மார்கள் தேடுகின்றனர். இஃது ஒரு விந்தையாக உள்ளது.

கிறி - பொய்மொழி. செறி - நெருங்கிய.

54 தேடுற் றிலகள்ள நோக்கந்
தெரிந்தில சொற்கள்முடி
கூடுற் றிலகுழல் கொங்கை
பொடித்தில கூறும்இவள்
மாடுற் றிலமணி யின்மட
அல்குலும் மற்றிவள்பால்
நாடுற் றிலஎழில் ஏகம்ப
ஞர்க்குள்ளம் நல்கிடத்தே.

பொ - ரை: கண்பார்வை கபடத்தைத் தேடத் தொடங்கவில்லை, சொற்களோ தெளிவடையவில்லை, கூந்தல் முடித்தலைப் பொருந்தவில்லை, கொங்கைகள் அரும்பவில்லை, சொல்லப்பட்ட இவளிடத்து அழகும் இளமையும் பொருந்திய அல்குற்றடங்களும் விருத்தி அடையவில்லை. மேலும், இவளிடத்துத் திருவேகம்ப முடையாருக்கு நன்மை செய்யும்பொருட்டு மனம் நாடவில்லை.

இது இளமைகூறி மறுத்தல். தலைவியின் வடிவுக்கு அஞ்சி மலர்ந்தறியா என்றதல்லது மறுத்துக்கூறியவா றன்று. சிறப்பின்மை கூறப்பட்டதென உட்கொண்டு சிறப்பான தழையுடைகொண்டு செல்ல, அதுகண்ட தோழி எம் தலைவி குழலும் கொங்கையும் குவியாத குதலை மொழியாள்; அத்தகையவளுக்கு நீ சொல்லும் காரியம் சிறிதும் பொருத்தமுடையது அன்று என்று இளமைகூறி மறுத்தல்.

55 நல்கும் புகழ்க்கட லூர்நன்
மறையவன் உய்யநண் ணிக்
கொல்கின்ற கூற்றைக் குமைத்தவெங்
கூற்றம் குளிர்திரைகள்
மல்குந் திருமறைக் காட்டமிர்
தென்றும் மலைமகள்தான்
புல்கும் பொழிற்கச்சி ஏகம்பம்
மேவிய பொன்மலையே.

பொ-ரை: உமையம்மையானவள் எப்போதும் தழுவி உறைகின்ற சோலைசூழ்ந்த திருக்கச்சியேகம்பத்தைப் பொருந்தியுள்ள பொன்மலையானது, புகழைக் கொடுக்கின்ற திருக்கடவூரில் இருந்த நல்ல வேதியச் சிறுவன் உய்யும்பொருட்டு அவனைக் கொல்ல வந்த இயமனைக் கொன்ற வெவ்விய கூற்றுவன் ஆயிற்று; குளிர்ந்த கடல் அலைகள் நிறைந்த திருமறைக்காட்டில் அன்பர்க்கு அமிர்தமாயிற்று.

மறையவன்-மார்க்கண்டன். ஏகம்பமேவிய பொன் மலையாகிய இறைவன் கூற்றுவனுக்குக் கூற்றுவனும், அன்பர்க்கு அமுதமுமாவான் என்பதாம்.

குமைத்த - கொன்ற. 'கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கை விரட்டனாரே' எனவரும் தேவாரம் இங்கு எண்ணுதற்குரியது.

56 மலையத் தகத்தியன் அர்ச்சிக்க
மன்னி வடகயிலை
நிலையத் தமரர் தொழஇருந்
தான்நெடு மேருஎன்னும்

சிலையத்தன் பைம்பொன் மதில்திரு
ஏம்பகத் தான்திகழ்நீர்
அலையத் தடம்பொன்னி சூழ்திரு
வையாற் றருமணியே.

பொ - ரை: நீண்ட மகாமேருமலையாகிய வில்லை ஏந்திய திருக்கையை உடையவன், பசும்பொன்னால் செய்யப்பட்ட மதில்சூழ்ந்த திருவேகம்பமுடையானாகிய விளங்குகின்ற நீர் அலைகளையுடைய பெரிய காவிரி நதியினால் சூழப்பட்ட திருவையாறு என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கிற அருமையாகிய மாணிக்கம் போல்பவன், அகத்தியமுனிவன் அருச்சிக்கும்படி பொதியமலையில் நிலைபெற்று வடகயிலைக் கோயிலில் தேவர்கள் வணங்க வீற்றிருந்தான்.

திருவேகம்பன் பொதியமலையின்கண்ணும் வட கயிலையின்கண்ணும் நிலைபெற்றுள்ளான் என்பதாம்.

57 மணியார் அருவித் தடஇம
யங்குட கொல்லிகல்லின்
திணியார் அருவியின் ஆர்த்த
சிராமலை ஐவனங்கள்
அணியார் அருவி கவர்கிளி
ஒப்புமின் சாரல்விந்தம்
பணிவார் அருவினை தீர்க்குமஏ
கம்பர் பருப்பதமே.

பொ-ரை: தொழும் அன்பர்களுடைய தீர்த்தற்கு அரிய வினைகளைத் தீர்த்தருள்கின்ற திருவேகம்பமுடையாரது பருப்பதங்கள், மணிகள்நிறைந்த அருவியாறுகளை உடைய பெரிய இமயமலையும், குடநாட்டுக்

கொல்லிமலையும், கல்லினுல் திணிக்கப்பட்டு நிறைந்த அருவியாறுகளால் நிறைக்கப்பட்ட திருசிராமலையும், மலைநெற்களையும் அழகு நிறைந்த தினைத்தாள்களையும் கவர்கின்ற கிள்ளைகளை ஒட்டுகின்ற இனிய சாரலையும் உடைய விந்தமலையுமாம்.

திருஏகம்பமுடையார் எல்லாவிடங்களிலும் உள்ள மலைகளில் விற்றிருந்து அருள்செய்கின்ருர்.

ஐவனம் - மலைநெல். பருப்பதம் - மலை.

58 பருப்பதங் கார்தவழ் மந்தரம்
இந்திர நீலம்வெள்ளை
மருப்பதங் கார்கருங் குன்றியங்
கும்பரங் குன்றம்வில்லார்
நெருப்பதங் காகுதி நாறு
மகேந்திரம் என்றிவற்றில்
இருப்பதங் காவுகந் தான்கச்சி
ஏகம்பத் தெம்இறையே.

பொ-ரை: திருக்கச்சியேகம்பத்திலுள்ள எங்கள் இறைவன் மேகங்கள் தவழ்கின்ற மந்தரமலையும், இந்திரநீல மலையும், வெள்ளிய கொம்புகளுள்ள கரு மலைகள் சஞ்சரிக்கின்ற திருப்பரங்குன்றமும், ஒளி நிறைந்த நெருப்பு அவ்விடத்தில் ஆகுதியோடு கமழ் கின்ற மகேந்திரமலையும் என்ற இவ்விடங்களில் எழுந் தருளியிருப்பதாக விரும்பினன்.

கச்சியேகம்பன் மந்தரம் முதலிய மலைகளைத் தனது இருப்பிடமாகக்கொண்டு விளங்குகிருன் என்பதாம்.

59 இறைத்தார் புரம்எய்த வில்லிமை
நல்லிம வான்மகட்கு
மறைத்தார் கருங்குன்றம் வெண்குன்றஞ்
செங்குன்ற மன்னற்குன்றம்
நிறைத்தார் நெடுங்குன்றம் நீள்கழுக்
குன்றம்என் தீவினைகள்
குறைத்தார் முதுகுன்றம் ஏகம்பர்
குன்றென்று கூறுமினே.

பொ - ரை: திரிபுரத்தை அழித்த வில்லைக் கையி லேந்திய இறைவன் இமவான்மகளை தனது இடப் பாகத்தில் கொண்டு ஆன்மாக்களின் தீவினைகளைக் குறைத்தற்பொருட்டு, திருமுதுகுன்றம்முதலாய தலங் களை இடமாகக்கொண்டு விளங்குகிறார் என்பதாம்.

60 கூறுமின் தொண்டர்குற் றாலம்நெய்த்
தானந் துருத்தியம்பேர்
தேறுமின் வேள்விக் குடிதிருத்
தோணி புரம்பழனம்
ஆறுமின் போல்சடை வைத்தவன்
ஆரூர் இடைமருதென்(று)
ஏறுமின் நீரெம் பிரான்கச்சி
ஏகம்பம் முன்நினைந்தே.

பொ - ரை: தொண்டர்களே! குற்றாலத்தையும் திருநெய்த்தானத்தையும் திருத்துருத்தியையும் அழகிய திருப்பேரையும் புகழுங்கள்; திருவேள்விக்குடியை யும் திருத்தோணிபுரத்தையும், திருப்பழனத்தையும் தேடிச்செல்லுங்கள்; மின்திரண்டாற்போன்ற சடையி னிடத்து நதியை வைத்தவனது திருவாரூர் திருவிடை

மருதூர் என்று சொல்லிக்கொண்டு எம்பெருமானது திருக்கச்சியேகம்பத்தை நினைத்து மனம் நைந்து வெளியேறுங்கள்.

61 நினைவார்க் கருளும் பிரான்திருச்
சோற்றுத் துறைநியமம்
புனைவார் சடையோன் புகலூர்
புறம்பயம் பூவணம்நீர்
பனைவார் பொழில்திரு வெண்காடு
பாச்சில் அதிகைஎன்று
நினைவார் தருநெஞ்சி னீர்கச்சி
ஏகம்பம் நண்ணுமினே.

பொ-ரை: தன்னை நினைப்பவர்க்கு அருள்செய்கின்ற பெருமானது திருச்சோற்றுத்துறை, திருநியமம், அலங்கரிக்கப்பட்ட நீண்ட சடைமுடியையுடையானது திருப்புகலூர், திருப்புறம்பயம், திருப்பூவணம், நீர்மையுள்ள நெடிய பனஞ்சோலை சூழ்ந்த திருவெண்காடு, திருப்பாச்சில், திருவதிகை என்கின்ற நினைவு நிறைந்திருக்கின்ற மனத்தினை உடைவர்களே! திருக்கச்சியேகம்பத்தை அடையுங்கள்.

62 நண்ணிப் பரவுந் திருவா
வடுதுறை நல்லம்நல்லூர்
மண்ணிற் பொலிகடம் பூர்கடம்
பந்துறை மன்னுபுன்கூர்
எண்ணாற் கரிய பராய்த்துறை
ஏர்கொள் எதிர்கொள்பாடி
கண்ணிப் பிறைச்சடை யோன்கச்சி
ஏகம்பம் காண்மின்சென்றே.

பொ-ரை: திருவாவடுதுறையையும், நல்லூரையும், நிலவுலகில் விளங்குகின்ற திருக்கடம்பூரையும், திருக்கடம்பந்துறையையும், நிலைபெற்ற திருப்புன்கூரையும், நினைப்பதற்கு அரிய திருப்பராய்த்துறையையும், அழகைக் கொண்ட திருவெதிர்கொள்பாடியையும் அடைந்து துதியுங்கள்; மதிமாலை மிலைந்த சடையுடையானது திருக்கச்சியேகம்பத்தை வழிபடுங்கள்.

63 சென்றேறி விண்ணுறும் அண்ணா
மலைதிகழ் வல்லம்மென்பூ
இன்தேறல் பாய்திரு மாற்பேறு
பாசூர் எழில்அழுந்தூர்
வன்தே ரவன்திரு விற்பெரும்
பேறு மதில்ஒற்றியூர்
நின்றோர் தருகச்சி ஏகம்பம்
மேயார் நிலாவியவே.

பொ-ரை: உயர்ந்துபோய் ஆகாயத்தைத் தீண்டுகின்ற திருவண்ணாமலை, விளங்குகின்ற திருவல்லம், மெல்லிய மலரில் உள்ள தேன் பாய்கின்ற திருமாற்பேறு, திருப்பாசூர், அழகிய திருவழுந்தூர், வலிய தேரை உடையவனை சூரியன் பூசித்த திருவிற்பெரும்பேறு, மதில் சூழ்ந்த திருவொற்றியூர் என்னும் திருப்பதிகளெல்லாம், நிலைபெற்று அழகைத்தருகின்ற திரு ஏகம்பமுடையார் வீற்றிருக்கும் பதிகளேயாம்.

64 நிலாவு புகழ்த்திரு வோத்தூர்
திருவாமாத் தூர்நிறைநீர்
சுலாவு சடையோன் புலிவலம்
வில்வலங் கொச்சைதொண்டர்

குலாவு திருப்பனங் காடுநன்
மாகறல் கூற்றம்வந்தால்
அலாயென் றடியார்க் கருள்புரி
ஏகம்பர் ஆலயமே.

பொ - ரை: நிலைபெற்ற புகழையுடைய திருவோத்தூர், திருவாமாத்தூர், நிறைந்த நீரினால் சூழப்பட்ட சடைமுடியையுடையோனது திருப்புலிவலம், திருவில்வலம், சிகாழி, அடியார்கள் சூழ்ந்து விளங்குகின்ற திருப்பனங்காடு, நல்ல திருமாகறல் இவைகள் இயமன் வந்தால் ஏடா என்று எழுப்பி அடியார்க்கு அருள்செய்கின்ற திருவேகம்பரது ஆலயங்களாம்.

65 ஆலையங் கார்கரு காவைகச்
சூர்திருக் காரிகரை
வேலையங் கேறு திருவான்மி
யூர்திரு வூறல்மிக்க
சோலையங் கார் திருப் போந்தைமுக்
கோணந் தொடர்கடுக்கை
மாலயன் வாழ்திரு வாலங்கா
டேகம்பம் வாழ்த்துமினே.

பொ - ரை: ஆலைகள் அவ்விடத்து நிறைந்துள்ள திருக்காவை, திருக்கருகாவூர், திருக்காரிகரை, கடலானது அவ்விடத்துக் கரையேறி வருகின்ற திருவான்மியூர், திருவூறல், மிகுதியாகிய பூஞ்சோலைகள் நிறைந்த திருப்போந்தை, திருமுக்கோணம்,கொன்றை மாலையை அணிந்தவனாகிய சிவபெருமான் வாழ்கின்ற திருவாலங்காடு, திருவேகம்பம் ஆகிய திருப்பதிகளை என்றும் வாழ்த்துங்கள்.

66 வாழப் பெரிதெமக் கின்னருள்
செய்யும் மலர்க்கழலோர்
தாழச் சடைத்திரு ஏகம்பர்
தம்மைத் தொழாதவர்போய்
வாழப் பரற்சுரம் ஆற்ரு
தளிரடி பூங்குழல்எம்
ஏழைக் கிடையிறுக் குங்குய
பாரம் இயக்குறினே.

பொ - ரை: நித்தியவாழ்வு பெற்று வாழும்படியாக எங்களுக்கு மிகவும் இனிய அருளைப் புரிகின்ற தாமரை மலர்போலும் திருவடியுடையவரும், நீண்ட சடையினை உடைய திருவேகம்பமுடையாருமாகிய அவரை வணங்காதவர் போய் வாழ்தற்குரிய அந்தப் பருக்கைக் கற்கள் நிறைந்த பாலைநிலத்தைத் தளிர் போலும் பாதங்கள் சகிக்கப்பெருத மலரை அணிந்த கூந்தலையுடைய எமது பெண்ணுக்குத் தனபாரம் அசைதலுறின், அவை இவளது நுண்ணிய இடையை முறித்தேவிடும். ஆதலால், இவளை விரும்புவோர்க்கு எம் அன்னை கொடுக்கவுங்கூடும்.

தோழி தாயின் வருத்தம்கூறி வரைவுகடாயினள். அன்னை தலைவியின் கொங்கை முதிர்வுகண்டு இவள் சிற்றிடைக்கு ஒரு பற்றுக்கோடு காணவில்லை என்று அஞ்சுகின்ருள்; ஆதலின் இனி மறுக்காது மகளைக் கொடுப்பாள் என்று தோழி தலைவனுக்குக் கூறினள்.

67 உறுகின்ற வெவ்வழல் அக்கடம்
இக்கொடிக் குன்பின்வரப்
பெறுகின்ற வண்மையி னுல்ஐய
பேரருள் ஏகம்பனர்

துறுகின்ற மென்மலர்த் தண்பொழிற்
கச்சியைச் சூழ்ந்திளையோர்
குறுகின்ற பூங்குவ ளைக்குறுந்
தண்பனை என்றுகொளே.

பொ - ரை : எம் ஐயனே! ஒருகாலைக்கொருகால் மிகாநின்ற வெவ்விய நெருப்பையுடைய அந்தப் பாலை நிலமும், இப்பெண்ணுக்கு உன் பின்னே தொடர்ந்து வரப்பெறுகின்ற வண்மையினால் பெருங்கருணையை உடைய திருவேகம்பமுடையாரது நெருங்குகின்ற மிக மெல்லிய மலர்களையுடைமையால் தட்பமாக உள்ள சோலைசூழ்ந்த கச்சியை வளைந்து, இளைஞர் நெருங்கு கின்ற பொலிவாகிய குவளைமலர்கள் மிக்கு விளங்கு கின்ற தண்ணிய வயல்சூழ்ந்த மருதநிலமேயாம் என்று நீ உன் மனத்தகத்துக் கொள்வாயாக.

இது ஆதரம் கூறல். உடன்போக்கின் அருமை கூறிய தலைமகனுக்கு, நின்றோடு வருதலைப் பெறின் அவளுக்கு வெஞ்சுரமும் தண்சுரமாம்; நீ வழியின் அருமைகூறுது அவளை உடனழைத்துக்கொண்டுபோ எனத் தோழி தலைமகளது ஆதரத்தைத் தலைமகனிடம் கூறல்.

68 கொள்ளுங் கடுங்கதி ரிற்கள்ளி
தீச்சில வேய்உலர்ந்து
விள்ளும் வெடிபடும் பாலையென்
பாவை விடலைபின்னே
தெள்ளும் புனற்கச்சி யுள்திரு
ஏகம்பர் சேவடியை
உள்ளும் அதுமறந் தாரெனப்
போவ துரைப்பரிதே.

பொ - ரை : தன்மேல் ஏற்றுக்கொண்ட கடுமையாகிய சூரிய வெப்பத்தால் சில கள்ளிச்செடிகளும், நெருப்பைத் தன்னிடத்தேயுடைய சில மூங்கில்களும் உலர்ந்து பிளப்பதும் வெடிப்பதுமாகிய தொழில்கள் நிகழப்பெறுகின்ற பாலைநிலத்தில் என் பாவை மிகத் தெளிந்த நீர்வளம் செறிந்த கச்சியிலுள்ள திருவேகம்பமுடையாரது திருவடிகளை நினைத்தலை மறந்தவர்கள் போல ஒரு காளையின்பின்னே போவதைக் குறித்துச் சொல்லுதல் அருமையாம்.

இது சுரம்போக்கு. பாலைநிலத்தே தலைமகன்பின் போன தலைமகளது மென்மையையும் பாலைநிலத்து வெம்மையையும் எண்ணிச் செவிலி இரங்கா நிற்றல்.

69 பரிப்பருந் திண்மைப் படையது
கானர் எனிற்சிறகு
விரிப்பருந் துக்கிரை ஆக்கும்வெய்
யேன்அஞ்சல் செஞ்சடைமேல்
தரிப்பருந் திண்கங்கை யார்திரு
ஏகம்பம் அன்னபொன்னே
வரிப்பருந் திண்சிலை யேயும
ராயின் மறைகுவனே.

பொ - ரை ; பகைவர் தாங்குதற்கரிய வலிமையுள்ள அத்தோன்றுகின்ற படை வேடராயின் அவர்களைச் சிறகு விரித்தலையுடைய பருந்துக்கூட்டத்திற்கு இரையாக்குதற்குரிய கொடியேன், ஆதலால் நீ அஞ்ச வேண்டா ; அழகிய செஞ்சடாபாரத்தின்மீது தரிக்கப் பெற்ற அருமையாகிய திண்ணிய கங்கையையுடையவரது திருவேகம்பத்தை ஒத்த பொன்போல்வாளே !

கட்டமைந்த பெரிய வலிய வில்லையுடைய உமராயின் மறைந்து போகிறேன்.

இது தலைமகன் கூற்று. தலைமகன் தலைமகளை உடன்கொண்டு சுரத்தின்கண்ணே செல்ல, அவளது உறவினர் பின்னே தொடர்ந்து வருவதைத் தலைமகள் கண்டு தலைமகனுக்கு உணர்த்த, அவன் மறுமொழி கூறுவது.

70 வனவரித் திண்புலி யின்னதள்
ஏகம்ப மன்னருளே
எனவரு பொன்னணங் கென்னணங்
கிற்கென் எழிற்கழங்கும்
தனவரிப் பந்துங் கொடுத்தெனைப்
புல்லியும் இற்பிரிந்தே
இனவரிக் கல்லதர் செல்வதெங்
கேலல்கும் ஏழைநெஞ்சே.

பொ - ரை: தளருகின்ற அறியாமை உடைய மனமே! அழகாகிய கோடுகளையும் திண்மையையும் உடைய புலியின்தோலை அணிந்துள்ள திருவேகம்ப முடையாரது திருவருளே என்றுசொல்லும்படி வந்த திருமகள் அழகுகண்டு வருந்துதற்குரிய என் தையலுக்கு எனது அழகிய அம்மனைக்காயையும் தன்னுடைய வரிந்து புனைந்த பந்தையும் தந்து, என்னைத் தழுவியும் மனையை நீங்கிக் கூட்டமாகிய பருக்கைக் கற்கள் செறிந்த பாலைநிலத்தில் எங்கே போவது?

இது குறிப்புரைத்தல். வருத்தங்கூறி உடன்போக்கினை உணர்த்தி அதுவழியாகநின்று என்னைப் புல்லிக் கொண்டு தன்னுடைய பூவையையும், தன் பந்தையும்,

பாவையையும், கிளியையும் இன்று என்கைத் தந்தாள்; காரணம் உன்னோடு உடன்போதலைக் கருதிப்போலும் என்று தோழி தலைமகனுக்குத் தலைமகளின் குறிப்பினைக் கூறுதல்.

71 நெஞ்சார் தரஇன்பஞ் செய்கழல்
ஏகம்பர் கச்சியன்னாள்
பஞ்சார் அடிவைத்த பாங்கிவை
ஆங்கவள் பெற்றெடுத்த
எஞ்சார் வொழியத்தன் பின்செல
முன்செல வெடுவெடென்றே
அஞ்சா அடுதிறற் காளைதன்
போக்கிவை அந்தத்திலே.

பொ - ரை : மனம் அனுபவிக்கும்படி சுகத்தைச் செய்யும் திருவடிகளையுடைய திருவேகம்பமுடையாரது கச்சிநகரையொப்பாள் பஞ்சின்தன்மை அமைந்த பாதங்களை வைத்த பக்கங்கள் இவை; அதுபோலவே அவளை ஈன்றெடுத்த எமது சார்புகெடத் தன்பின்னே தொடர்ந்துசெல்ல முன்னே சென்ற அஞ்சாமையும் பகைவரைக் கொலைசெய்யும் வலிமையும் உடைய விடலையின் வெடுவெடென்று நடந்த அடிச்சுவடுகள் இவை என்று முடிவிலே கூறப்பட்டுள்ளது.

இது சுவடுகண்டறிதல்.

72 இலவவெங் கான்உனை அல்லால்
தொழுஞ்சரண் ஏகம்பனார்
நிலவுஞ் சுடரொளி வெய்யவ
னேதண் மலர்மிதித்துச்

செலவும் பருக்கை குளிரத்
தளிரடி செல்சுரத்துன்
உலவுங் கதிர்தணி வித்தருள்
செய்யுன் உறுதுணைக்கே.

பொ - ரை: யாவரும் வணங்குதற்கு உரிய திருவடியையுடைய திருவேகம்பமுடையாரது விளங்கும் ஒளிபோல் விளங்குகின்ற சூரியனே! பருக்கைக்கற்கள் தண்ணிய மலர்மீது மிதித்துச் செல்லுதலைப் போலச் செல்லும்படி குளிர்ந்திருக்கவும் தளிர்போலும் பாதங்களையுடைய எனது பெண் நடந்த சுரத்தின்கண்ணே இலவ மலரைப்போன்ற கண்டார்க்கு விருப்பத்தைத் தருகின்ற கல்நுனிக்கேயன்றி உன் உற்ற துணைக்கு உனது விசுகின்ற கிரணங்களைத் தணிவித்து அருள் செய்வாயாக.

இது தலைவியின் மென்மைகண்டு சுடரோடிரத்தல்.

75 துணையொத்த கோவையும் போலெழிற்
பேதையும் தோன்றலுமுன்
இணையொத்த கொங்கையொ டேஒத்த
காதலொ டேகினரே
அணையத்தர் ஏறெத்த காளையைக்
கண்டனம் மற்றவரேல்
பிணையொத்த நோக்குடைப்
பெண்ணிவள் தன்னெடும் பேசுமினே.

பொ - ரை: சமானமாகிய ஒரு ஈடுள்ள உம்மைப் போல அழகுள்ள தலைவியும் தலைவனும் இரண்டும் ஒன்றற்கொன்று ஒத்த கொங்கைகளுக்கு நிகரான ஆசையோடு போயினரோ உரைமின்; உமாதேவியைத்

தழுவுகின்ற சிவபெருமானது இடபத்தை ஒத்த ஒரு கட்டிளங்காளையைக் கண்டோம், ஏனையரோ எனின் அவரைக்குறித்துப் பெண்மானின் பார்வை போன்ற பார்வையையுடைய இவளோடும் பேசுங்கள்.

இச்செய்யுள் வினு விடை.

74 மின்னலிக் கும்வணக் கத்திடை
யாளையும் மீளியையும்
நென்னலிப் பாக்கைவந் தெய்தின
ரேல்எம் மனையிற்கண்டீர்
பின்னரிப் போக்கருங் குன்று
கடந்தவர் இன்றுகம்பர்
மன்னரி தேர்ந்து தொழுங்கச்சி
நாட்டிடை வைகுவரே.

பொ - ரை : மின்னற்கொடியை வருத்துகின்ற துவண்ட இடையையுடையாளும் விடலையும் நேற்று வந்து இந்தச் சிற்றூரை அடைந்திருப்பார்களாயின், எம் வீட்டில் அவர்களைக் கண்டேயிருப்பீர். பிறகு, அவர்கள் செல்லுதற்கு அரிய இந்த மலையைக்கடந்து இன்று திருவேகம்பமுடையாரது நிலைபெற்ற திருமால் ஆராய்ந்து வணங்குகின்ற திருக்கச்சிநாட்டில் தங்கி யிருப்பார்கள்.

இது மீளவுரைத்தல். செவிலியை நோக்கிக்கூறியது.

75 உவரச்சொல் வேடுடைக் காடுகந்
தாடிய ஏகம்பனுர்
அவரக்கன் போன விமானத்தை
ஆயிரம் உண்மைசுற்றும்

துவரச் சிகரச் சிவாலயஞ்
சூலந் துலங்குவிண்மேல்
கவரக்கொடி திளைக் குங்கச்சி
காணினுங் கார்மயிலே.

பொ - ரை: இடுகாட்டில் உவந்து ஆடிய கச்சி ஏகம்பனார் இராவணனை வருத்தி, அவனைச் சிவனடியனாக்கி ஆண்டுகொண்டவர். அத்தகைய சிறப்பினையுடைய காஞ்சிபுரத்தை அடைந்து வாழ்கின்றவர்கள் என்றும் இன்பமே அடைவார்கள் என்பதாம்.

76 கார்மிக்க கண்டத் தெழில்திரு
ஏகம்பர் கச்சியின்வாய்
ஏர்மிக்க சேற்றெழில் நெல்நடு
வோர்ஒலி பொன்மலைபோல்
போர்மிக்க செந்நெல் குவிப்போர்
ஒலிகருப் பாலையொலி
நீர்மிக்க மாக்கட லின்னொலி
யேயொக்கும் நேரிழையே.

பொ - ரை: சிறந்த ஆபரணங்களை அணிந்து விளங்கும் பெண்ணே! கருமைமிக்க கண்டத்தழகையுடைய திருவேகம்பமுடையாரது திருக்கச்சியில் வளப்பம் மிக்க சேற்றின்கண் நெற்பயிரை அழகாக நடுவோர் ஓசையும், மகாமேருமலைபோல மிகுதியாகிய செந்நெற்களைப் போர்களாகக் குவிப்போர் ஓசையும், கரும்பாலையின் ஓசையும் நீர் மிகுந்த பெரிய கடல் ஓசையை ஒத்து விளங்கிற்று. தலைவியே! நீ இதை உற்றுக் கேள் என்று தலைவன் கூறினான்.

இது நகரணிமை கூறல்.

77 நேர்த்தமை யாமை விறற்கொடு
வேடர் நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமை யாலிமை தீந்தகண்
பொன்னே பகட்டுரிவை
போர்த்தமை யால்உமை நோக்கருங்
கம்பர்கச் சிப்பொழிலுள்
சேர்த்தமை யால்இமைப் போதணி
சீதஞ் சிறந்தனவே.

பொ - ரை : பகைவர் எதிர்த்து அமையாமைக்கு ஏதுவாகிய வலிமையுள்ள கொடிய வேடர்கள் வாழ்கின்ற நெடுமையாகிய பாலைநிலத்தை நோக்கினமையால் இமை கரிந்த கண்களையுடைய பொற்கொடி போல்வாளே! யானையின் தோலைப் போர்த்தமையால் உமாதேவி அச்சங்கொண்டு பார்த்தற்கு அரிய திரு ஏகம்பரது கச்சியிலுள்ள சோலையில் சேர்ந்ததனால் இமைப்பொழுதில் அழகிய குளிர்ச்சியை அடைந்தன; இனி நீ பயப்படவேண்டாம்.

இது வெப்பம் தணிந்தமை கூறல்.

78 சிறைவண்டு பாடுங் கமலக்
கிடங்கிவை செம்பழுக்காய்
நிறைகொண்ட பாளைக் கமுகின்
பொழில்இவை தீங்கனியின்
பொறைகொண்ட வாழைப் பொதும்புவை
புன்சடை ஏகம்பனூர்
நறைகொண்ட பூங்கச்சி நாடெங்கும்
இவ்வண்ணம் நன்னுதலே.

பொ - ரை : அழகிய நெற்றியை உடையாளே! சிறைகளையுடைய வண்டுகள் பாடும் கமலத்தடங்கள் இவை; சிவப்பாகப் பழுத்துள்ள காய்களை நிறையக் கொண்ட பாளைகளை உடைய கமுகமரச்சோலைகள் அவை. மதுரமாகிய கனிகளின் பாரத்தைத் தாங்கிய வாழைச்சோலைகள் உவை. புல்லிய சடையையுடைய திருவேகம்பமுடையாரது மணங்கொண்ட மலர்ச் செறிவுள்ள கச்சிநாட்டின்கண் எவ்விடங்களும் இவ் வண்ணமாகவுள்ளது.

இது நகர்வளம் கூறல்.

79 நன்னுத லார்கருங் கண்ணுஞ்செவ்
வாயும்இவ் வாறெனப்போய்
மன்னித ழார்திரு நீலமும்
ஆம்பலும் பூப்பவள்ளை
என்னவெ லாம்ஒப்புக் காதென்று
விறிடும் ஏகம்பனர்
பொன்னுத லார்விழி யார்கச்சி
நாட்டுளிப் பொய்கையுளே.

பொ-ரை: திருவேகம்பமுடையாராகிய நெற்றிக் கண்ணையுடைய இறைவர் உள்ள கச்சிநாட்டில் இப் பொய்கையின்கண் மாதரது கருங்கண்களும், சிவந்த வாயும் இப்படியாமென்று சொல்லும்வண்ணம் நிலை பெற்ற இதழ்கள் நிறைந்த அழகிய நீலப்பூக்களும், செவ்வல்லிப்பூக்களும் சென்று மலர, எல்லா வகையானும் காதிற்கு வள்ளைத்தண்டு ஒப்பாகும் என்று சொல்லும்படி எக்காலத்தும் மேன்மை அடைந்து விளங்கும்.

80 உள்வார் குளிர நெருங்கிக்
கருங்கிடங் கிட்ட நன்னீர்
வள்வா ளைகளொடு செங்கயல்
மேய்கின்ற எங்களை ஆட்
கொள்வார் பிறவி கொடாதஏ
கம்பர் குளிர்குவளை
கள்வார் தருகச்சி நாட்டெழில்
ஏரிக் களப்பரப்பே.

பொ - ரை: எம்மை ஆட்கொள்ளும்பொருட்டுப் பிறவிகளை எமக்குக் கொடாத ஏகம்பமுடையாரது குளிர்ந்த குவளைமலர்களின் தேனொழுகாநின்ற கச்சி நாட்டின்கண் அழகிய ஏரிகளின் இடப்பரப்புக்களில் உள்ளனவாய் நீர் குளிர நெருங்கி மிக ஆழமாகிய பள்ளங்களில் நிறைந்துள்ள நல்ல நீரில் வளவிய வாளை மீன்களோடு செங்கயல்கள் மேய்கின்றன.

81 பரப்பார் விசும்பிற் படிந்த
கருமுகி லன்ன நன்னீர்
தரப்பா சிகள்மிகு பண்பொடு
சேம்படர் தண்பணைவாய்ச்
சுரப்பார் எருமை மலர்தின்னத்
துன்னுக ராவொருத்தல்
பொரப்பார் பொலிநுத லாய்செல்வக்
கம்பர்தம் பூங்கச்சியே.

பொ-ரை: விளங்கும் நெற்றியை உடையவளே! செல்வப்பொலிவுள்ள திருவேகம்பரது அழகிய கச்சியில் பரப்பு நிறைந்த ஆகாயத்தில் படிந்த கருமேகங்களை ஒத்த நல்ல தரமும் மேன்மையும் உள்ள பாசிகள்

மிக்கிருக்கும் குணத்தோடு சேப்பஞ்செடிகள் அடர்ந்த குளிர்ந்த வயல்களில் பாற்சுரப்புள்ள எருமைகள் மலர் களை உண்ண நெருங்கிய ஆண்முதலைகள் அவற்ரோடு போர்செய்தலைக் காண்பாயாக.

82 கச்சார் முலைமலை மங்கைகண்
ணாரஎண் ணான்கறமும்
வைச்சார் மகிழ்திரு ஏகம்பர்
தேவி மகிழவிண்ணோர்
விச்சா தரர்தொழு கின்ற
விமானமுந் தன்மம்அரு
அச்சா லையும்பரப் பாங்கணி
மாடங்கள் ஓங்கினவே.

பொ - ரை: கச்சணிந்த கொங்கைகளையுடைய மலைமடந்தையாகிய மகிழாநின்ற திருக்கச்சி ஏகம்பரது தேவியார் பெருமை நிரம்ப முப்பத்திரண்டு அறங்களை யும் உலகிடை வைத்து மகிழும்படித் தேவர்களும் வித்தியாதரரும் வணங்குகின்ற விமானமும், அறங்கள் நீங்காது நிகழ்கின்ற அறச்சாலைகளும், பரந்த அழகிய மாளிகைகளும் உயர்ந்து விளங்குகின்றன.

இதுவரை உள்ள பாடல்கள் நகர்வளங்கூறல்.

"வன்றான்புன் றவிதன் காதோலை
சோலை மடந்தடம்வெண்
சுன்றாம் பறவைப் பிணஞ்சுடல்
தூரியஞ் சோறளித்தல்
கன்றுடி யாவிற் குரிஞ்சுகல்
வாயுறை கண்மருந்து
தண்ணீர்ப்பந் தல்தலைக் கெண்ணெய்
பெண்போகந் தரலையமே.

மேதகு மாதுலர்க் குச்சாலே
யேறு விடுத்தல்கலே
ஓதுவர்க் குண்டி விலங்கிற்
குணவோ டுயர்பிணிநோய்க்(கு)
ஈதல் மருந்து சிறைச்சோ
றளித்த லியல்பிறரின்
மாதுயர் காத்தனற் கன்னியர்
தானம் வழங்கலுமே.

கற்ற வறுசம யத்தோர்க்
குணவு கருதும்விலே
யுற்ற தளித்துயிர் மீட்டல்
சிருக் குதவனற்பால்
மற்று மகப்பெறு வித்தல்
சிரை வளர்த்தலெனப்
பெற்ற விவற்றினை யெண்ணுன்
கறமெனப் பேசுவரே.''

இப்பாடல்களால் முப்பத்திரண்டு அறங்களையும் அறியலாம்.

83 ஓங்கின ஊரகம் உள்ளகம்
உம்பர் உருகிடமாம்
பாங்கினில் நின்ற தரியுறை
பாடகம் தெவ்விரிய
வாங்கின வாட்கண்ணி மற்றவர்
மைத்துனி வான்கவிகள்
தாங்கின நாட்டிருந் தாளது
தன்மனை ஆயிழையே.

பொ - ரை : உள்ளும் புறமும் ஒத்து, மனமுருகி வழிபடும் அடியவர்கள் உள்ளத்துள் இடம்பெற்று

உறையும் இறைவன் என்றும் உளக்கனிவோடு வழி படுவோரைக் குறிக்கொண்டு காத்து அளித்து அருள் செய்வான் என்பதாம்.

84 இழையா ரரவணி ஏகம்பர்
நெற்றி விழியின்வந்த
பிழையா அருள் நம் பிராட்டிய
தின்ன பிறங்கலுன்னும்
நுழையா வருதிரி சூலத்தள்
நோக்கரும் பொன்கடுக்கைத்
தழையார் பொழிலுது பொன்னே
நமக்குத் தளர்வில்லையே.

பொ - ரை: பொன்னைப்போல்வாளே! இந்த மலை அழகிய அரவாபரணத்தை அணிந்த ஏகம்பரது நெற்றிக் கண்ணினின்றும் வந்த பிழையாத அருளையுடைய நம் இறைவியது நினைத்தற்கு உரிய நுழைந்து வருகின்ற திரிசூலத்தை உடையாளது பார்த்தற்கு அரிய பொன் போலும் கொன்றையினது செழித்தல் பொருந்திய சோலையாகும்; ஆதலால் இனி நமக்குத் தளர்வு இல்லை.

இது நகரணிமை கூறல்.

85 தளரா மிகுவெள்ளங் கண்டுமை
ஓடித் தமைத்தழுவக்
கிளையார் வளைக்கை வடுப்படும்
ஈங்கோர் கிறிபடுத்தார்
வளமாப் பொழில்திரு ஏகம்பம்
மற்றிது வந்திறைஞ்சி
உளரா வதுபடைத் தோம்மட
வாய்இவ் வுலகத்துளே.

பொ - ரை : உமாதேவியானவள் அதிகரித்து வரும் கம்பையாற்றின் வெள்ளப்பெருக்கைக் கண்டு மனந்தளர்ந்து ஓடி, இறைவனைத் தழுவிக்கொள்ள, தளிர்போன்ற வளையலை அணிந்த கையினது தழும்பு பொருந்தும்படியாக இவ்விடத்து ஓர் வழியை உண் டாக்கினவரது வளமாகிய பெரிய சோலைசூழ்ந்த திரு வேகம்பம் என்னும் திருப்பதியாகிய இதனை வந்து வணங்கி, பெண்ணே! இந்த உலகத்திற்குள் பிறந்துள் ளோம் என்னும் தன்மையை அடைந்தேம்.

86 உலவிய மின்வடம் வீசி
உருமதிர் வுள்முழங்கி
வலவிய மாமதம் பாய்முகில்
யானைகள் வானில்வந்தால்
சுலவிய வார்குழல் பின்னரென்
பாரி ரென நினைந்து
நிலவிய ஏகம்பர் கோயிற்
கொடியன்ன நீர்மையனே.

பொ - ரை: மின்னலோடு கூடி இடியினை இடிக் கும் மேகங்களை ஒத்து, மதம்பொழிகின்ற யானைகள் கூட்டமாக வந்தால் சிறந்த கூந்தலையுடைய பெண்கள் அதன்பின்னே செல்ல அஞ்சி, திருவேகம்பத்திலுள்ள இறைவனை அடைக்கலமாக அடைவார்கள். இதனை நீ காண்பாயாக.

87 நீரென் னிலுமழுங் கண்முகில்
காள்நெஞ்சம் அஞ்சலையென்(று)
ஆரென் னிலுந்தம ராயுரைப்
பாரம ராவதிக்கு

நேரென் னிலுந்தகுங் கச்சியுள்
ஏகம்பர் நீள்மதில்வாய்ச்
சேரென் னிலுந்தங்கும் வாட்கண்ணி
தான்அன்பர் தேர்வரவே.

பொ-ரை: நெஞ்சமே! அஞ்சாதே. நாம் கச்சி ஏகம்பரை வணங்கினல், நமக்கு அவர் தார் முதலியன தந்து அருள்செய்து ஆண்டுகொள்வார். அமராபதிக்கு ஒத்த மதில்சூழ்ந்த காஞ்சிநகரை நாம் அடைந்தால் நம் அன்பரைக் காணலாம் என்பதாம்.

88 வரங்கொண் டிமையோர் நலங்கொள்ளும்
ஏகம்பர் கச்சியன்னய்
பரங்கொங்கை தூவன்மின் நீர்முத்தம்
அன்பர்தந் தேரின்முன்னே
தரங்கொண்டு பூக்கொண்டு கொன்றை
ளுகத்தண் காந்தட்கொத்தின் [பொன்
கரங்கொண்டு பொற்சுண்ணம் ஏந்தவும்
போந்தன கார்முகிலே.

பொ-ரை: தேவர்கள் வரம்பெற்று நன்மையை அடைகின்ற திருவேகம்பரது கச்சியை ஒப்பவளே! கண்ணிராகிய முத்தத்தைப் பெரிய தனங்களின்மேல் தூவாதீர்கள். அன்பரது தேர் வருமுன்னமே கார்கா லத்து மேகங்கள் மேன்மையைக்கொண்டு கொன்றை மலர்களைப் பொன்னகக்கொண்டு தண்ணிய காந்தள் பூங்கொத்துக்களை இனிய கையிலேகொண்டு பொற் சுண்ணத்தைத் தாங்கவும் வந்தன.

இது தலைவி கூற்று.

89 கார்முக மாரவண் கைக்கொண்ட
கம்பர் கழல்தொழுது
போர்முக மாப்பகை வெல்லச்சென்
ருர்நினை யார்புணரி
நீர்முக மாக இருண்டு
சுரந்தது நேரிழைநாம்
ஆர்முக மாக வினைக்கடல்
நீந்துதும் அயர்வுயிர்ப்பே.

பொ-ரை: நேரிழையாய்! மேருவில்லைப்பொருந்த வளவிய கையிற்கொண்ட திருவேகம்பமுடையாரது திருவடியை வணங்கி, யுத்தமுனையில் பெரும்பகையை வெல்லச்சென்ற நம் தலைவர் கடல்நீர் தன்னிடத்ததாக மேலும் இருண்டு பெருகினதை நினையாராயினர்; இனி நாம் எவர் வாயிலாக வினைக்கடலைக் கடப்போம்; கடக்க இயலாமையால் நெட்டுயிர்ப்பே நம்மிடையே உள்ளது.

இது தலைவி தோழிக்குக் கூறியது.

90 உயிரா யினஅன்பர் தேர்வரக்
கேட்டுமுன் வாட்டமுற்ற
பயிரார் புயல்பெற்ற தென்னநம்
பல்வளை பான்மைகளாம்
தயிரார்பால் நெய்யொடும் ஆடிய
ஏகம்பர் தம்அருள்போல்
கையிரா வளையழுந் தக்கச்
சிறுத்தன கார்மயிலே.

பொ-ரை: கார்காலத்து மயிலை ஒப்பவளே! உயிரை ஒத்த தலைவரின் தேர் வரும் ஓசை கேட்டு

முன்னே வாட்டம் அடைந்திருந்த பயிர்கள் நிறைந்த மேகநீரைப் பெற்றாற்போல நம் தலைவியது தன்மைகள் வேறுபட்டன. காரணம் என்னெனின், தயிர் பால் நெய் இவற்றுடன் திருமஞ்சனமாடிய திருவேகம்ப முடையாரது அருள்போலக் கையில் இராது கழன்று சிந்தின வளையல்கள் அழுந்த, கச்சு இறுக்கப்பட்டன.

தலைவன் பிரிந்தநிலையில் அப்பிரிவாற்றாது தலைவி உடம்பு மெலிந்தாள். அதனால் கையிலுள்ள வளையல் கள் சிந்தின. தலைவன்தேர்வரும் ஓசைகேட்டு, தலைவி யின் உடல் பூரித்தது, இதனை 'கையிராவளை அழுந்த' என்ற தொடரால் விளக்குகிறார். தலைவன் பிரிவால் தளர்ந்த கொங்கை இப்பொழுது உடலின் பூரிப்பால் விம்மிக் கச்சைக் கிழித்தது என்னும் குறிப்பை, 'கச்சு இறுத்தன' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.

இறைவன் பஞ்சகவ்வியங்களுக்கு மிக உகந்தவன் என்ற உண்மையை இப்பாடலால் உணரலாம். தயிரார் பால் நெய்யோடு ஆடிய ஏகம்பர் : இதனை 'ஆனுற்ற ஐந்தும் அமர்ந்தாய் நீயே' எனவரும் தேவாரப் பகுதி யாலும் அறியலாம்.

91 கார்விடை வண்ணத்தன் அன்றேழ்
தழுவினும் இன்றுதனிப்
போர்விடை பெற்றெதிர் மாண்டார்
என அண்டர் போதவிட்டார்
தார்விடை ஏகம்பர் கச்சிப்
புறவிடை தம்பொனன்பூண்
மார்விடை வைகல் பெறுவார்
தழுவ மழவிடையே.

பொ - ரை : மேகத்தை ஒத்த நிறத்தையுடைய கண்ணன் அக்காலத்து ஏழு இடபங்களைத் தழுவினும் இப்பொழுது ஒப்பற்ற போரின்கண் விடுகையைப் பெற்று எதிர்ந்து புலர்மடிந்தார் என்று சொல்லும்படி ஆயர்கள் இளவேற்றை வெளிறே விட்டார்கள். இவ் வேற்றைத் தழுவினவர்கள் அழகிய மலர்மாலையணிந்த இடபவாகனத்தை உடைய ஏகம்பரது கச்சியைச் சார்ந்த முல்லைநிலத்தின்கண் தமது பொன்னை ஒப்பவளாகிய பெண்ணின் அழகிய ஆபரணங்களை அணிந்த மார்பில் நாடோறும் தழுவப்பெறுவார்கள்.

இது வரைவு கடாதல். இப்பாடல் முல்லைத்திணை பற்றியது. முல்லைநிலத்து மக்கள் தங்கள் இல்லில் ஒரு பெண் பிறந்தால் அப்பெண்வீட்டார் தங்கள் வீட்டில் உள்ள பசுவின் கன்றுகளை அப்பெண்ணை வளர்ப்பது போன்று சிறப்புற வளர்ப்பார்கள். அவ் வாறு வளர்ந்துள்ள ஆனேறுகளைத் தழுவிய தலைமகனுக்குத் தங்கள் பெண்ணைக் கொடுப்பது வழக்கம். இதனை அகப்பொருள்காரர் ஏறுதழுவுதல் என்று கூறுவர். முல்லைநிலத்து ஆயர்கள் இம்மரபுடையவர்கள் என்பது பண்டைய வழக்கு.

92 விடைபாய் கொடுமைஎண் ணாதுமே
லாங்கன்னி வேற்கருங்கண்
கடைபாய் மனத்திளங் காளையர்
புல்கொலி கம்பர்கச்சி
மடைபாய் வயலிள முல்லையின்
மான்கன்றொ டான்கன்றினம்
கடைபாய் தொறும்பதி மன்றிற்
கடல்போற் கலந்தெழுமே.

பொ-ரை: இடபம் பாய்கின்ற கொடுமையை நினையாமல் மேன்மையையுடைய பெண்ணினது வேல் போலும் கண்ணின் கடையானது பாயப்பெற்ற மனத்தினையுடைய இளைய விடலையர் அவற்றைத் தழுவு மோசை திருஏகம்பமுடையாரது கச்சிப்பதியின்கண் மடைகளில் நீர் பாய்கின்ற வயல்நிலத்திலும் முல்லை நிலத்திலுமுள்ள மான்கன்றுகளுடன் பசுங்கன்றின் கூட்டம் வாயில்களில் பாயுந்தோறும் முல்லைநிலத்து வெள்ளிடையில் கடல்போலக் கலந்து ஒலிக்கும்.

93 எழுமலர்த் தண்பொழில் ஏகம்பர்
கச்சி இருங்கடல்வாய்க்
கொழுமணப் புன்னைத் துணர்மணற்
குன்றிற் பரதர்கொம்பே
செழுமலர்ச் சேலல்ல வாளல்ல
வேலல்ல நீலமல்ல
முழுமலர்க் கூரம்பின் ஓரிரண்
டாலும் முகத்தனவே.

பொ-ரை: உண்டாகின்ற மலர்களால் தண்மையமைந்த சோலை சூழ்ந்த திருவேகம்பத்திலுள்ளாரது கச்சியைச் சார்ந்த பெரிய கடற்கரையில் கொழுவிய மணமுள்ள புன்னைப்பூங்கொத்துக்கள் பரவிய மணற் குன்றின் மீதுள்ள பரதவர்மாதே! செழுமையாகிய தாமரைமலர்மேலுள்ள சேல்மீன்கள் அல்ல, வாள்கள் அல்ல, வேல்கள் அல்ல, நீலமலர்கள் அல்ல, உனது முகத்திடத்து முழுமலரின்மீதுள்ள கூரிய அம்புகள் போல ஓர் இரண்டு பொருள்கள் அசையாநின்றன.

இது தலைமகன் கூற்று.

94 முகம்பாகம் பண்டமும் பாகமென்
றோதிய மூதுரையை
உகம்பார்த் திரேலென் நலமுய
ரேகம்பர் கச்சிமுன்னிர்
அகம்பாக வார்வின் அளவில்லை
என்னின் பவளச்செவ்வாய்
நகம்பால் பொழிற்பெற்ற நாமுற்ற
வாகொள்க நன்மயலே.

பொ - ரை: இறைவன் என்றும் பிரித்துணராது நன்மை செய்பவர் ஆதலால் திருக்கச்சியில் உள்ள இவரும் நமது நிலைமை கருதி, நமக்கு என்றும் அருள் செய்வார். அதனால் நாம் எதையும் மனத்தில் எண்ணி மயங்கவேண்டாம்.

95 மயக்கத்த நல்லிருள் கொல்லுஞ்
சுறவோ டெறிமகரம்
இயக்கத் திடுசுழி ஓதங்
கழிகிள ரக்கழித்தார்
துயக்கத் தவர்க்கரு ளாக்கம்பர்
கச்சிக் கடலபொன்னால்
முயக்கத் தகல்வு பொருள்கொண்க
நீர்வரும் ஊர்க்கஞ்சுமே.

பொ - ரை: எம் தலைவி உம்மீது உள்ள அன்பு காரணமாக உம்மையே எண்ணி உருகுகின்றாள். அது காரணமாக நீர் வரும்வழியின் அருமையை எண்ணி வருந்துவதாக இந்தத் திருப்பாடல் பொருள்விளக்கம் கொடுக்கின்றது.

96 மேயிரை வைகக் குருகுணா
ராமது உண்டுபுன்னை
யியிரை வண்டோ தமர்பு
கடிய விரிகடல்வாய்ப்
பாயிரை நாகங்கொண் டோன்தொழும்
கம்பர்கச் சிப்பவ்வநீர்
தூயிரை கானல்மற் றூர்அறி
வார்நந் துறைவர்பொய்யே.

பொ - ரை : குருகு வண்டு முதலியவைகள் தத் தமக்குரிய இரையினைத் தேரும் சோலைகள் சூழ்ந்த கச்சியினைத் தொழுகின்றவர் என்றும் இன்பத்தையே நுகர்வர் என்பதாம்.

97 பொய்வரு நெஞ்சினர் வஞ்சனை
யாரையும் போகவிடா
மெய்வரும் பேரருள் ஏகம்பர்
கச்சி விரையினவாய்க்
கைவரும் புள்ளொடு சங்கினம்
ஆர்ப்பநஞ் சேர்ப்பர்திண்தேர்
அவ்வரு தாமங் களினம்வந்
தார்ப்ப அணைகின்றதே.

பொ - ரை : பொய் அமைந்த மனத்தினையுடைய ராகிய வஞ்சகரையும் நழுவிப்போகவிடாமல் விளக் கின்ற உண்மை அமைந்த பேரருளுடைய திருவேகம்ப முடையாரது கச்சியிடத்து விரைந்தனவாகி இரு புறத்தும் வருகின்ற பறவைகளோடு சங்குக் கூட்டங் கள் ஒலிக்கவும், அவ்வாறு பெருகுகின்ற ஒளியின்

தொகுதி விளங்கவும் நம் சேர்ப்பரது திண்ணிய தேர் வந்து சேர்கின்றது.

இது தோழி கூற்று.

98 இன்றுசெய் வோம்இத னில்திரு
ஏகம்பர்க் கெத்தனையும்
நன்றுசெய் வோம்பணி நாளைஎன்
றுள்ளிநெஞ் சேஉடலில்
சென்றுசெ யாரை விடுந்துணை
நாளும் விடாதடிமை
நின்றுசெய் வாரவர் தங்களின்
நீள்நெறி காட்டுவரே.

பொ - ரை : திருவேகம்பருக்கு உரிய பணிகளை இன்றே செய்வோம். எவ்வளவாயினும் நன்றே செய்வோம். அவ்வாறு செய்யும் பணியை நாளை என்னாது இன்றே செய்வோம். இவ்வாறு பணி செய்யும் அடியார்கட்கு அவ்விறைவர் நல்ல நெறியையே காட்டுவர்.

99 காட்டிவைத் தார்தம்மை யாங்கடிப்
பூப்பெய்யக் காதல்வெள்ளம்
ஈட்டிவைத் தார்தொழும் ஏகம்பர்
ஏதும்இ லாதஎம்மைப்
பூட்டிவைத் தார்தமக் கன்பது
பெற்றுப் பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத் தார்பர வித்தொழு
தாம்அவர் பாதங்களே.

பொ - ரை : அவ்விடத்துத் திருவடியில் மலர்களை அருச்சிக்கத் தம்மை எமக்குக் காட்டிவைத்தவர்

ஆசைப்பெருக்கைச் சேகரித்து வைத்தவர்களாகிய அடியார்கள் வணங்குதற்குரிய திருஏகம்பமுடையார், நற்பண்பு சிறிதும் இல்லாத எங்களைத் தம்மிடத்து அன்பைப் பொருத்திவைத்தார்; அதனைப் பெற்று நூறு பாடல்களைப் பாடுவித்தார். ஆதலால், அவரது திருவடிகளைத் துதித்து வணங்குவோம்.

*100* பாதம் பரவியோர் பித்துப்
பிதற்றினும் பல்பணியும்
ஏதம் புகுதா வகையருள்
ஏகம்பர் ஏத்தெனவே
போதம் பொருளாற் பொலியாத
புன்சொற் பனுவல்களும்
வேதம் பொலியும் பொருளாம்
எனக்கொள்வர் மெய்த்தொண்டரே.

பொ - ரை: மெய்யடியார்கள் திருவடியைத் துதித்துப் பிதற்றினும் அதனையும் நல்ல துதி என்றே கொண்டு, அவ்வாறு பிதற்றியவருடைய அடிமைத் தொழில்களையும் குற்றமுண்டாகாதவண்ணம் அருள் புரிகின்ற திருவேகம்பர் பொருளினால் ஞானம் விளங்குதல் இல்லாத எனது புல்லிய சொற்களைக்கொண்டு தொடுத்த நூல்களையும் வேதத்தில் விளங்குகின்ற பொருளேயாம் என்று ஏற்றுக்கொள்வர்.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

# திருவேகம்பமாலை

1 அறந்தான் இயற்றும் அவனிலும்
கோடி அதிகம்இல்லம்
துறந்தான் அவனிற் சதகோடி
உள்ளத் துறவுடையோன்
மறந்தான் அறக்கற் றறிவோ(டு)
இருந்(து)இரு வாதனையற்(று)
இறந்தான் பெருமையை என்சொல்லு
வேன்கச்சி யேகம்பனே.

2 பொல்லா தவன்நெறி நில்லா
தவன்ஐம் புலன்கள்தமை
வெல்லா தவன்கல்வி கல்லா
தவன்மெய் யடியவர்பால்
செல்லா தவன்உண்மை சொல்லா
தவன்நின் திருவடிக்கன்(பு)
இல்லா தவன்மண்ணி லேன்பிறந்
தேன்கச்சி யேகம்பனே.

3 மாயநட் டோரையும் மாயா
மலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே
புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக்
கூடிப்பின் தாயைமறந்(து)
ஏயும தேநிட்டை யென்றுன்
எழிற்கச்சி யேகம்பனே.

4 பொருளுடை யோரைச் செயலினும்
வீரரைப் போர்க்களத்தும்
தெருளுடை யோரை முகத்தினும்
தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடை யோரைத் தவத்தில்
குணத்தில் அருளில்அன்பில்
இருளறு சொல்லினும் காணத்
தகுங்கச்சி யேகம்பனே.

5 கல்லார் சிவகதை நல்லோர்
தமக்குக் கனவிலும்மெய்
சொல்லார் பசித்தவர்க்(கு) அன்னங்கொ
டார்குரு சொன்னபடி
நில்லார் அறத்தை நினையார்
நின்நாமம் நினைவில்சற்றும்
இல்லார் இருந்தென் இறந்தென்
புகல்கச்சி யேகம்பனே.

6 சொல்லால் வருங்குற்றம் சிந்தனை
யால்வரும் தோடம்செய்த
பொல்லாத தீவினைப் பார்வையில்
பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடும்
தீங்குகள் ஆயவும்மற்(று)
எல்லாப் பிழையும் பொறுத்தருள்
வாய்கச்சி யேகம்பனே.

---

